# அம்ருதா

AMRUDHA

14 ஆம் ஆண்டு

வேள்வி 14 கலசம் 157
Volume 14 Issue 157

ஆகஸ்ட் 2019 ரூ. 25
August 2019 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism

குஷ்வந்த் சிங்
ந. பெரியசாமி
பாலை நிலவன்
ராம் முரளி
வண்ணநிலவன்
டி. கண்ணன்
பொ. கருணாகரமூர்த்தி
ஆர்.கே. நாராயண்
மணி வேலுப்பிள்ளை
நடேசன்
ஸிந்துஜா
பூமா ஈஸ்வரமூர்த்தி
இளங்கோ
மார்டின் பட்லர்
ஷங்கர்ராமசுப்ரமணியன்
எஸ். நந்தகுமார்
மு. இசக்கியப்பன்
யோகன்

## விண்வெளி ஆய்வில் முன்னேறும் இந்தியா!

அம்ரிதா பிரீதம்

## நிஜமும் நிழலும்





எழுத்தாளர்களின் மறுபக்கம்

## கத்தியில் காதலைக் கண்ட கலைஞன்!

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




Rs. 140




Rs. 130




Rs. 170




Rs. 110




Rs. 200




Rs. 100




Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 157

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஆகஸ்ட்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவி சுப்பிரமணியம்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

## இந்த இதழில்

# விண்வெளி ஆய்வில் முன்னேறும் இந்தியா!

**பிரபு திலக்**

விண்வெளி ஆய்வில் உலகமே வியக்கும் வகையில் மீண்டும் ஒரு சாதனையை நிகழ்த்தியுள்ளது இந்திய விண்வெளி ஆய்வு மையம் (இஸ்ரோ). சந்திரயான் 2 விண்கலம் வெற்றிகரமாக விண்ணில் செலுத்தப்பட்டு, பூமியின் வட்டப்பாதையை அடைந்து சுற்றி வரத் தொடங்கியுள்ளது. அடுத்து சந்திரயான் 2 நிலவை நோக்கி நகரத் தொடங்கி சில நாட்களில் சரியாக நிலவின் தென் பகுதியை அடையும். அப்போது, இஸ்ரோவின் சாதனைகளிலேயே ஒரு மைல்கல்லாக அது அமையும்.

2008ஆம் ஆண்டு அக்டோபர் 22ஆம் தேதி அதிகாலை 12:52 மணிக்கு சந்திரயான் விண்கலம் விண்ணில் ஏவப்பட்டது. நிலவு குறித்து ஆராய்ச்சி செய்வதற்கென பிரத்தியேகமாக உருவாக்கப்பட்டதுதான் இந்த விண்கலம். நிலவின் வட்டப்பாதையில் சுற்றி வந்த சந்திரயான் நிலவில் நீர் மூலக்கூறுகள் இருப்பதைக் கண்டறிந்து அறிவியல் உலகத்தை வியப்பில் ஆழ்த்தியது. அமெரிக்கா அப்போலோ விண்கலத்தை 163 பில்லியன் டாலர் செலவில் நிலவில் என்ன இருக்கிறது எனக் கண்டுபிடிக்க அனுப்பியது. அப்போது நீரைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மனிதனை அனுப்பினார்கள். அப்போதும் நிலவில் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனால், வெறும் 53 மில்லியன் டாலரில் சந்திரயானை அனுப்பி நிலவில் தண்ணீர் உள்ளது என்பதைக் கண்டுபிடித்தனர் இந்திய அறிவியலாளர்கள்.

சந்திரயானின் மிகப்பெரிய வெற்றிக்குப் பிறகு நிலவு குறித்த மேலதிக தகவல்களை ஆராய்ந்து தெரிந்துகொள்ளச் சந்திரயான் 2 திட்டம் தொடங்கப்பட்டது. சந்திரயான் 2வை நிலவின் தென் துருவத்துக்கு அனுப்பி நிலவின் முழு வரலாற்றையும் தெரிந்துகொள்ள இஸ்ரோ திட்டமிட்டது. விண்வெளித் துறையில் ஆதிக்கம் செலுத்த நினைக்கும் அத்தனை நாடுகளுக்கும் மிகப்பெரிய சவாலாக உள்ள இந்த சாதனையைப் படைக்க இஸ்ரோ தயாரானது. சந்திரயான் 2கான வேலைகளை உற்சாகத்தோடு தொடங்கினர்.

இந்தியாவைப் பொறுத்தவரை இது வெறுமென நிலவு குறித்த ஆராய்ச்சி மட்டுமல்ல, 2022ஆம் ஆண்டு மனிதனை விண்ணுக்கு அனுப்பும் ‘ககன்யான்’ திட்டத்திற்கான முன்னோட்டமாகவும் இது பார்க்கப்படுகிறது. எனவே, 640 டன் எடையும் 44 மீட்டர் உயரமும் அதிக சக்தியும் கொண்ட ஜி.எஸ்.எல்.வி. மார்க் 3 ஏவுகணையைச் சந்திரயான் 2ஐ சுமந்து செல்ல உருவாக்கினர். இந்த ஜி.எஸ்.எல்.வி. மார்க் 3 ஏவுகணைதான் ‘ககன்யான்’ திட்டத்திற்கும் பயன்படுத்த இருப்பது குறிப்பிடத்தக்கது.

ஆர்பிட்டர், லேண்டர், ரோவர் ஆகிய மூன்று முக்கிய பாகங்களைக் கொண்டது, சந்திரயான் 2 விண்கலம். ஏவுகணை மூலம் விண்ணிற்குப் பறக்கும் சந்திரயான் 2வை புவி வட்டப்பாதையில் நிலை நிறுத்தியவுடன் ஏவுகணை செயலிழந்துவிடும். அதன்பிறகு சந்திரயான் 2 புவியின் நீள் வட்டப்பாதையிலேயே சுற்றி வந்து கிட்டத்தட்ட 3,84,000 கி.மீ. அப்பால் உள்ள நிலவின் வட்டப்பாதையைச் சென்று சேரும்.

அதன்பிறகு நிலவின் சுற்றுப்பாதையில் சுற்றி வரும் சந்திரயான் 2விலிருந்து லேண்டர், ரோவர் பகுதிகள் மட்டும் நிலவின் தென் துருவத்தில் தரையிறங்கும். சந்திரயான் 2வில் மிகவும் கடினமான, சவாலான பணியாக இந்த நிலவில் தரையிறங்கும் பணி பார்க்கப்படுகிறது. அதிவேகத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் சந்திரயான் 2விலிருந்து வேகம் குறைந்து 30 கி.மீ வேகத்தில் மெதுவாக எந்த பிரச்சினையுமின்றி லேண்டரும் ரோவரும் தரையிறங்க வேண்டும். உலகநாடுகள் பலவும் இந்த விஷயத்தில்தான் தட்டுத் தடுமாறி வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.

நிலவில் தரையிறங்கிய பிறகு லேண்டர் வாகனம் நகராமல் அதே இடத்திலிருந்தே ஆய்வுகளை மேற்கொள்ளும். அதே நேரத்தில் ரோவர் வாகனம் தரையிறங்கிக் குறிப்பிட்ட சில தூரம் சென்று ஆய்வுகளை மேற்கொள்ளும். லேண்டர் வாகனத்திற்கு விக்ரம் என்றும் ரோவர் வாகனத்திற்கு பிரக்யான் என்றும் பெயரிட்டுள்ளனர். விக்ரமும் பிரக்யானும் தங்கள் வேலைகளைச் சரிவரச் செய்யும்பட்சத்தில் நிலவில் தென் துருவப் பகுதியில் தண்ணீர் உள்ளதா? மனிதன் நிலவில் வசிக்க முடியுமா என்பன உட்படப் பல கேள்விகளுக்கு விடை கிடைக்கும்.

முன்பு விண்கலத்துக்கான கருவிகளை வெளி நாட்டிலிருந்தே இஸ்ரோ பெற்றது. ஆனால், இம்முறை சந்திரயான் 2கான கருவிகளை தானே

தயாரித்திருக்கிறது. விண்கலத்தின் ஒரு பகுதியான லேண்டரை முதன்முறையாகத் தயாரித்துள்ளதுடன், தானே இயங்கும்படி வடிவமைத்துள்ளது. அதில் பழுது ஏற்பட்டாலும் அதனை அதுவே சரி செய்துகொள்ளும். எந்த இடத்துக்குப் போக வேண்டும்? இறங்கக்கூடிய இடம் பத்திரமாக உள்ளதா? எவ்வளவு வேகத்தில் போக வேண்டும் என மனிதனின் கட்டுப்பாடு இல்லாமல் அதுவே இயங்கும் வகையிலான கருவிகள் லேண்டரில் பொருத்தப்பட்டுள்ளது.

லேண்டர் போல் ரோவர் வாகனத்தையும் புதிதாக செய்திருக்கிறார்கள். இறங்கிய பிறகு நகர்ந்து செல்ல 6 சக்கரங்களுடன் கூடிய வண்டி வடிவத்தில் இதனை உருவாக்கி இருக்கிறார்கள். லேண்டர் எந்த இடத்தில் உள்ளதோ அங்கிருந்து 500 மீட்டர் சுற்றளவில் ரோவர் பயணிக்க முடியும். இதில் 2 கருவிகள் உள்ளன. அதன் மூலம் நிலவில் எது மாதிரியான கனிமங்கள் உள்ளது என்பதை ஆய்வு செய்யும்.

கதிர்வீச்சு செலுத்தி ஆய்வுகள் செய்யும் போது கனிமங்கள் மேலே வர வாய்ப்பு உள்ளது. அவை எது மாதிரியான கனிமங்கள் என்பதை ரோவரில் பொருத்தப்பட்டிருக்கும் படக்கருவி புகைப்படம் எடுத்து அனுப்பும். மண்ணை சூடாக்கும் போது அதிலிருந்து ஆவி வெளிப்படும். இதன்மூலம் நிலவின் தென் துருவத்திலும் நீர் இருக்கிறதா, நிலவில் மெக்னீசியம், அலுமினியம், சிலிகான் போன்ற தாதுகள் இருக்கிறதா என்பதையும் ரோவர் ஆய்வு செய்யும்.

சந்திரயான் 1 மாதிரிதான் சந்திரயான் 2விலும் ஆர்பிட்டர் பொருத்தப்பட்டிருக்கிறது. ஜிஎஸ்எல்வி, சந்திரயான் 2 விண்கலத்தை பூமியை சுற்றிய நீள்வட்ட பாதையில் நிறுத்திவிடும். ஆர்பிட்டர், லேண்டர், ரோவர் என்ற மூன்றும் சேர்ந்த கூட்டமைப்பை ஆர்பிட்டர் நிலவு வரை எடுத்து செல்லும். லேண்டர், ரோவர் ஆயுட்காலம் 14 நாட்கள் என நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. ஆனால், ஆர்பிட்டர் ஆயுள் 6 மாதம் முதல் 1 வருடம். ஆர்பிட்டர், பூமியிலிருந்து போய் நிலவில் கலன்களை விடுவித்துவிட்டு மீதி இருக்கும் காலத்தில் 100 கிலாமீட்டர் தூரத்தில் நிலவைச் சுற்றி வந்து தகவல் தரும். சந்திரயான் 1இல் பார்த்ததை இன்னொருமுறை உறுதிப்படுத்தும். துல்லியமாக இடங்களைக் காண முடியும்.

சந்திரயான் 2வை பற்றி ஒட்டுமொத்த இந்தியாவும் பெருமை கொண்டாலும் தமிழர்கள் இன்னும் கூடுதலாகப் பெருமைகொள்ளலாம். சந்திரயான் விண்ணில் ஏவப்பட்டபோது இஸ்ரோ இயக்குநராக இருந்தவர் மயில்சாமி அண்ணாதுரை. கோவை பொள்ளாச்சி சாலையில் உள்ள கோதவாடியைச் சேர்ந்தவர். இப்போது, சந்திரயான் 2 விண்ணில் ஏவப்படும் போது இஸ்ரோவின் தலைவராக இருக்கும் கே. சிவனும் ஒரு தமிழர். இவர் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள சரக்கல்விளை என்றகிராமத்தைச் சேர்ந்தவர். சந்திரயான் 2 திட்ட இயக்குநராக இருக்கும் வனிதா முத்தையாவும் ஒரு தமிழர். சென்னையைச் சேர்ந்தவர். 2013ஆம் ஆண்டு செவ்வாய்க் கிரகத்தை ஆராய ஏவப்பட்ட 'மங்கல்யான்' விண்கலத்தின் உருவாக்கத்திலும் வனிதா பங்களிப்பு உண்டு.

மயில்சாமி அண்ணாதுரை கட்டுப்பாட்டின் கீழ்தான் சந்திரயான் உருவாக்கப்பட்டு, வெற்றிகரமாக விண்ணில் செலுத்தப்பட்டது. 2008இல் இவர் இந்த சாதனையை நிகழ்த்திய உடனே சந்திரயான் 2 திட்டம் இவரின் தலைமையில் கீழ் தொடங்கப்பட்டது. ஆனால், அவரின் ஓய்வைத் தொடர்ந்து பணிகள் தொய்வடைந்தது. இஸ்ரோவின் தலைவராக கே. சிவன் நியமிக்கப்பட்டதும் சந்திரயான் 2வை உடனடியாக விண்ணில் செலுத்துவோம் என்று கூறினார். பணிகளை வேகமாக முடுக்கிவிட்டார். மயில்சாமி விதைத்த விதை இன்று சிவன், வனிதா வழியாக நிலவை நோக்கிப் பறந்துகொண்டிருக்கிறது.

மயில்சாமி அண்ணாதுரை, சிவன் இருவருமே அரசுப் பள்ளியில் தமிழ் வழியில் படித்தவர்கள். இஸ்ரோ அமைப்பில் பணிபுரியும் பெரும்பாலான அறிவியலாளர்கள் பிரதேச மொழிகளில் கல்வி பயின்றவர்கள்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

சந்திரயான் 2 உருவாக்கத்தில் இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம், இதன் குழுவில் பணியாற்றியவர்களில் 30 சதவிகிதம் பேர் பெண்கள். சந்திரயான் 2 திட்டத்தின் இயக்குநர்கள் இருவருமே பெண்கள். ஒருவர் வனிதா, இன்னொருவர் ரித்து கரிதால்.

நிலவில் நீர் இருக்கிறதா என்பதைப் பற்றியும், ஆரம்பக்கால சூரிய குடும்பம், அதன் உருவாக்கம் பற்றியும் அறிவதுதான் சந்திரயான் 2 திட்டத்தின் முதன்மையான இரண்டு நோக்கங்கள். மற்றொரு முக்கிய நோக்கமும் உள்ளது, அது வளி வர்த்தகம். அமெரிக்கா, ரஷ்யா, சீனா ஆகிய நாடுகளுக்கு அடுத்தபடியாக நிலவுக்கு விண்கலம் அனுப்பும் சாதனையை இந்தியா படைத்துள்ளது. இதனால், இந்தியாவுக்கு உலக அரங்கில் நற்பெயரும் அடையாளமும் கிடைத்திருக்கிறது. இதனால், இனிமேல் புதிதாக விண்வெளிக்குச் செல்ல விரும்பும் நாடுகள் இந்தியாவையே தேர்ந்தெடுக்கும். அமெரிக்காவுக்குச் சென்றால் செலவு அதிகம், இந்தியாவில் குறைவு. எனவே, வர்த்தக ரீதியாக மற்ற நாடுகள் இந்தியாவுக்கு வருவதற்கான நல்ல தலமாக இது உள்ளது.

இஸ்ரோ ஒரு அரசு சார்ந்த நிறுவனம் என்பதாலும், அதன் ஏவுகணைகள் விலை மலிவாக இருப்பதாலும், வளி வர்த்தகத்தை இந்தியா முற்று முழுதாக வளைத்துப் போட்டுவிடும் என அமெரிக்க நிறுவனங்கள் அச்சம் தெரிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது. Commercial Space TransportationAdvisoryCommittee(COMSTAC)என்றநிறுவனம், அமெரிக்க அரசிற்குக் கொடுத்துள்ள அறிக்கையில், இந்தியாவின் அரசு சார்பு நிறுவனமான இஸ்ரோவை மேலும் வளர அனுமதித்தால், அது அமெரிக்க வளி வர்த்தகத்தைக் கடுமையாகப் பாதிக்கும் எனத் தெரிவித்துள்ளது.

எல்லாவற்றையும்விட முக்கியமானது, இன்னும் சில பத்தாண்டுகளில், பூமியைச் சுற்றும் விண்வெளி நிலையங்கள் போய், நிலவில் விண்வெளிக்கு கூடங்கள் உருவாகலாம். அப்போது அதில் இந்தியா முன்னிலை வகிக்கும். ●

அம்ரிதா பிரீதம்
(1919 - 2005)

# நிழலும் நிஜமும்

குஷ்வந்த் சிங்
தமிழில்: ஸிந்துஜா

***முன்குறிப்பு***

*அம்ரிதா பிரீதம் (ஆகஸ்ட் 1919 - அக்டோபர் 2015) புகழ் பெற்ற பஞ்சாபி எழுத்தாளர். பஞ்சாபி இலக்கியத்தில் அவர் பெண்களின் குரலை எடுத்து ஒலித்த முக்கியமான ஆளுமையாகக் கருதப்பட்டார். கவிதாயினி என்ற புகழ் அவரை வந்தடைந்ததென்றாலும் அம்ரிதா நாவல்களும் கட்டுரைகளும் அதிக அளவில் எழுதியுள்ளார். திருமண ஏற்பாட்டில் நிகழும் கட்டுப்பாடுகள், பெண் சுதந்திரம், பாலுணர்வு பற்றிய ஒளிவு மறைவு அற்ற நடமாட்டம், காதல் ஆகிய விஷயங்களில் அவர் தீவிர கருத்துக்கள் கொண்ட படைப்பாளியாகக் கருதப்பட்டார். ஒரு கவிஞன் மீதான காதலினால் திருமண வாழ்விலிருந்து விலகிய அம்ரிதா அது நிறைவேறாததால் அவர் மீது தீராக் காதல் கொண்ட ஓர் ஓவியனுடன் திருமண பந்தம் எதுவுமில்லாமல் நாற்பது ஆண்டுகள் வாழ்க்கை நடத்தினார்.*



*சாகித்திய அகடெமிப் பரிசும் ஞானபீடப் பரிசும் பெற்றவர். பத்ம ஸ்ரீ, பத்ம விபூஷண் ஆகிய விருதுகளையும் பெற்ற அம்ரிதா இந்திய மக்களவையில் உறுப்பினராகப் பணியாற்றினார். பல்கேரியா, பிரான்சு, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் அரசுகள் அவருக்குப் பரிசுகள் அளித்துப் பாராட்டின. இந்திரா காந்தியுடன் நெருங்கிய பழக்கம் அவருக்கு இருந்தது. தனது 85வது வயதில் தூக்கத்தில் அம்ரிதா காலமானார்.*

*அவர் இறந்த போது புகழ்பெற்ற ஆங்கில எழுத்தாளரும் பஞ்சாபியுமான குஷ்வந்த் சிங் எழுதிய அஞ்சலி இது.*

## முத்திரையற்ற பயணச்சீட்டு

அம்ரிதா ஒரு பேரழகி. பாகிஸ்தானின் பஞ்சாபில் குஜ்ரன்வாலா என்ற இடத்தில் இந்துமத போதகராக அவர் தந்தை இருந்தார். அம்ரிதாவின் தாய் அம்ரிதாவுக்குப் பதினோரு வயதாகும் போது இறந்துவிட்டாள். மிகுந்த கட்டுப்பாடான சூழலில் வளர்க்கப்பட்ட அவள் தனது பதினாறாவது வயதில் தந்தையுடன் லாகூர் சென்றாள். தனிமை அவளைக் கவிதை எழுத வைத்தது. சீக்கிய குருக்களை பற்றியும் மதத்தைப் பற்றியும் எழுதப்பட்ட இக்கவிதைகள் உள்ளூர் சீக்கியர்களின் பலத்த ஆதரவைப் பெற்றன. விரைவில் அவள் பஞ்சாபி இலக்கிய வட்டாரங்களில் பெயரெடுக்க ஆரம்பித்தாள். அதற்கு முக்கிய காரணம் அவளது அழகுதான். அவளுடைய முதல் தொகுப்பை வாங்கியவர்களில் நானும் ஒருவன். அப்போது முன்னுக்கு வந்து கொண்டிருந்த கவி மோகன்சிங் மஹீர், அம்ரிதாவுடன் தனக்கு நெருங்கிய தொடர்பு உண்டு என்று சொல்லிக் கொண்டதில் உண்மை கொஞ்சமும் கற்பனை அதிகமும் இருந்தன.

அம்ரிதாவின் இலக்கிய வட்டாரப் புகழும், அவளது அபரிமிதமான அழகும், லாகூரில் அனார்கலி பஜாரில் இருந்த ஒரு வியாபாரியின் காதை அடைய அம்ரிதாவுக்கும் வியாபாரியின் மகன் பிரீதம் சிங்குக்கும் திருமணம் நடந்தது. அம்ரிதா கௌர், அம்ரிதா பிரீதம் ஆனாள். அவர்களுக்கு ஒரு மகன் பிறந்தான். இந்தியா - பாகிஸ்தான் பிரிவினையின் போது அவர்கள் தில்லிக்கு வந்தார்கள். பிரீதம் சிங் ஒரு தொழிலைத் தொடங்கி அது தோல்வியில் முடிவடைந்தது. அம்ரிதாவுக்கு அகில இந்திய வானொலியில் வேலை கிடைத்தது. தன் பழங்கால நினைவுகளை ஒழித்துக் கட்ட விரும்பிய அம்ரிதா கணவனை விவாகரத்து செய்துவிட்டு மகனைத் தன் பொறுப்பில் வைத்துக்கொண்டாள். தலை முடியை வெட்டி பாப் செய்துகொண்டாள். அதிக அளவில் சிகரெட் பிடிக்கும் பழக்கம் அவளைத் தொற்றிக்கொண்டது.

பிரிவினையின் தாக்கத்தால் அம்ரிதா எழுதிய, 'வாரிஸ் ஷாவுக்கு ஓர் அழைப்பு' என்னும் கவிதை அம்ரிதாவைப் பிரபலப்படுத்தியது. அதன் சில வரிகள்:

*செழிப்பான நிலங்களில் விஷச் செடிகள் புழங்கின.*

*வெறுப்பு விதைகள் எங்கும் தூவப்பட*

*காற்றில் பரவியிருந்த விஷம் புல்லாங்குழல்களைப் பாம்புகளாக்கின.*

*அந்த நஞ்சு ரோஜாவையொத்த பஞ்சாபை நீலம் பாரிக்கச் செய்தது.*

*குரல்வளைகள் பாட மறந்தன; இழைகள் அறுபட்டு*

*நண்பர்களை இழந்தோம். தொடர்புச் சக்கரம் ஓடாமல் நின்றது.*

*ரத்த மழையில் பூமி. கல்லறைகளில் செந்நிறம்.*

*காதல் இளவரசிகள் கல்லறைமுன் நின்று அழுகிறார்கள்.*

*துக்கங்களைப் போக்குபவனே! எழுத்து உன் பஞ்சாபைப் பார்.*

*நிலமெங்கும் சிதறிய உடல்கள்! செனாப் நதியெங்கும்*

*ரத்தம் ஓடுகிறது.*

*காதலையும் அழகையும் கவரும் திருடர்கள் எங்கும்.*

*ஓ, வாரிஸ் ஷாவை இன்னொரு முறை எங்கு சென்று நாங்கள் தேட?*

இந்தக் கவிதையின் சில வரிகள் மிக உன்னதமானவை என்று நான் நினைக்கிறேன்.

அம்ரிதாவின் படிப்பு சுமார்தான். பஞ்சாபியில் எழுதினாள். மற்ற மொழிகளை அவள் அறிந்திருக்கவில்லை என்பதால் அவள் எழுத்தில்



நளினத்தை எதிர்பார்ப்பது சிக்கலான விஷயம். பாலிவுட் பற்றி அவளுக்கு நிறைய கனவுகள் இருந்தன. அவளது வாழ்வின் லட்சியம் அவளது சில நாவல்களும் சிறுகதைகளும் திரைப்படமாக்கப்பட வேண்டும் என்பதுதான். முதன்முதலாக அவளது 'எலும்புக் கூடு' என்ற நாவல் பஞ்சாபியிலிருந்து ஆங்கிலத்துக்கு என்னால் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது. அவள் மீது இருந்த அன்பினால் இந்த மொழிபெயர்ப்பை இலவசமாகச் செய்து கொடுத்தேன். எனக்கு வர வேண்டிய ராயல்டியாக 'அவளுடைய வாழ்க்கையைப் பற்றி வெளிப்படையாக அவள் எனக்குத் தெரிவிக்க வேண்டும்' என்று ஒரு நிபந்தனை இட்டேன். அதற்கு ஒப்புக்கொண்டு பல சந்திப்புகளில் என்னிடம் அவள் வாழ்க்கையைப் பற்றிக் கூறினாள். அவள் சந்தித்திராத சஹீர் லூதியான்வி என்ற திரைப்படக் கலைஞனின் மீது அவள் கொண்டிருந்த காதல் ஒன்றுதான் ஒரு செய்தியாக எனக்குக் கிடைத்தது. சஹீரை நேரடியாக அவள் சந்தித்திருக்காவிட்டாலும் கடிதத் தொடர்பு இருந்ததாக அவள் கூறினாள். எனக்கு தனது வாழ்க்கை என்று இம்மாதிரி தந்த ஒற்றைச் செய்தி ஏமாற்றமளித்தது. 'ஒரு தபால்தலையில் நீ கூறிய சரிதத்தை எழுதிவிடலாம்' என்று ஒருமுறை அவளிடம் கூறினேன். அவள் பிற்காலத்தில் தன் சுயசரிதையை எழுதிய போது அதற்குத் 'தபால் தலை'யென்று பெயரிட்டாள்.

அம்ரிதா, சஹீரைக் கடைசியில் புதுதில்லியில் ஒருநாள் சந்தித்தாள். அவனுக்கு விமானத்தில் ஏறப் பயம் என்று ரயிலில் வந்தான். இருவரும் கிளாரிட்ஜ் ஓட்டலில் சந்தித்துக் கொண்டார்கள். இருவரிடையேயும் ஒன்றும் நடக்கவில்லை! சஹீர் பெரிய குடிகாரன் என்று அறிந்தேன்.

ஜன்பத்திலிருந்த என் தந்தையின் வீட்டிற்கு அம்ரிதா எப்போதாவது வருவாள். எங்களது பெரிய வீடும் தோட்டமும் அவளைக் கவர்ந்தன. அவள் கமலாதாஸை எனக்கு நினைவூட்டினாள். இருவருக்குமிடையே நிறைய விஷயங்களில் ஒற்றுமை இருந்தது. இருவரையும் வெவ்வேறு சந்தர்ப்பத்தில் அகில இந்திய வானொலிக்காகப் பேட்டி எடுத்தேன். நான் ஏதாவது சாதாரணக் கேள்வியைப் பற்றிக் கேட்டால்கூட இருவரும் தப்பித்து ஓடுவதில் குறியா யிருந்தார்கள். அவர்கள் இருவரும் சாதாரணக் கேள்விக்கான சாதாரணப் பதிலைக்கூடத் தரத் தெரியாதவர்கள்!

அம்ருதாவின் காதல் இம்ராஸ் மீதும் (முஸ்லீம் பெயர் போலத் தோன்றினாலும், அது சீக்கியப் பெயர்) இருந்தது. இம்ராஸுக்கும் அம்ரிதா மீது கண்மூடித்தனமான காதல். அவளும் அது ஏதோ தனக்குப் பாத்தியப்பட்டதுபோல நடந்துகொள்வாள். அவன் மிகச் சிறந்த ஓவியன். அம்ரிதாவின் அழகிய



கண்களை (அவை அவளது அழகின் உச்சத்தைத் தெரிவிப்பவை) வாசல் கதவிலும் படுக்கையறைச் சுவர்களிலும் வரைந்திருந்தான். அவளது புத்தகங்களுக்கான வடிவமைப்பை இம்ராஸ்தான் செய்தான். அவன் அவளுடைய காதலன், எடுபிடி, நகல் எல்லாமும்தான். அவன் வரைந்த வாரிஸ் ஷாவின் ஓவியத்தை எனக்குக் கொடுத்தான். அது இன்னமும் என் வீட்டில் இருக்கிறது.

அம்ரிதாவுக்கு எதையும் கொடுத்துப் பழக்கமில்லை. ஆனால், எதையும் பெற்றுக்கொள்வதற்கு ஆட்சேபம் தெரிவித்ததில்லை. நான் மொழிபெயர்த்த நாவல் திரைப்படமான போது, நான்தான் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவன் என்றுகூட அந்தப் படத்தில் அவள் காண்பிக்கவில்லை.

'நாகமணி' என்றொரு பத்திரிகையை நடத்தினாள். அதில் பெரும்பாலும் இடம்பெற்றது அவளுடைய எழுத்துக்களே. ஆயுள் சந்தா கேட்டு அவள் வருகிறாள் என்றால் மாடியிலிருந்து குதித்து ஓடுவதற்குப் பலர் தயாராயிருந்தார்கள். நானும் அத்தகையவர்களில் ஒருவனாய் இருந்தேன்.

அம்ரிதா மீது நான் அடைந்த முதல் ஏமாற்றம் அவளுக்கு சாகித்திய அகாதெமி பரிசு கிடைத்த போதுதான். நடுவர் குழுவில் உறுப்பினராக இருந்தது மட்டுமில்லாமல், பரிசு கிடைப்பதற்கு வேண்டிய கடைசி ஓட்டை அவள் தன் பெயருக்கு உபயோகப்படுத்திக்கொண்டு பரிசைப் பெற்றது எனக்கு மிகுந்த ஏமாற்றத்தை அளித்தது. அவளுக்கு ஞானபீடப் பரிசு கிடைத்த போது அவளது சில கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கொடுத்தேன். தில்லி அரசும் பஞ்சாபி அரசும் அவளுக்குப் பரிசாக 10 அல்லது 11 லட்சம் ரூபாய் வழங்கினார்கள். பணம் எப்போதும் அவளுக்கு ஒரு பிரச்சினையாக இருந்ததில்லை.

ஆனால், இந்த நிலைமைக்கு முற்றிலும் மாறாக அவளது பல நாவல்களும் சிறுகதைகளும் அமைந்திருந்தன. அவை அவளைக் குறுகிய பார்வை உடையவளாகக் காட்டின. அவற்றிலிருந்து வெளிப்படும் கதாபாத்திரங்களை வெளியுலகில் நாம் காண முடியாது. அக்கதைகளில் சித்தரிக்கப்பட்ட பெண்கள் பெரும்பாலும் தவறாகக் கணிக்கப்பட்டவர்களாக அல்லது தவறாக உபயோகிக்கப்பட்டவர்களாக இருப்பார்கள். கண்ணீரும் கம்பலையுமாக நடமாடுவார்கள். அவள் எழுத்தில் வாழ்க்கையின் சாரம் இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

அம்ரிதா தன் எழுத்தால் பலமுறை சிக்கல்களில் மாட்டிக் கொண்டிருந்திருக்கிறாள். சீக்கியம் பற்றி ஒரு தடவை அவள் தவறாக எழுதியதற்காக அமிர்தசரஸ் நீதிமன்றத்தில் வழக்கு நடந்தது. அவளுக்காக நான் கோர்ட்டில் ஆஜரானேன். அந்த வழக்கு கடைசியில் திரும்பப் பெற்றுக்கொள்ளப்பட்டது. மற்றொரு முறை இந்திப் பெண் எழுத்தாளரான கிருஷ்ணா சோப்தி காப்புரிமை விஷயமாக அம்ரிதா மீது வழக்குத் தொடர்ந்தார். சோப்தி தன சுயசரிதையை 'ஜிந்தகி நாமா' என்ற தலைப்பில் எழுதினார்.

அம்ரிதா யாரோ ஒரு புரட்சிக்காரனைப் பற்றி எழுதிய கட்டுரைக்கு இந்தத் தலைப்பைத் தந்திருந்தாள். நான் வழக்கு மன்றத்துக்குச் சென்று 'ஜிந்தகி நாமா' என்ற பெயருக்குக் காப்புரிமை யாரும் கொண்டாட முடியாது என்று வாதாடினேன். இதே தலைப்பில் சீக்கியர்களின் வரலாற்றுப் புத்தகத்தில் இரண்டு தொகுதிகள் உள்ளன என்று சுட்டிக் காட்டினேன். இதனால் சோப்திக்கு என் மீது தீராப் பகை ஏற்பட்டது. 'யுவர் ஹானர். இந்த ஆசாமி சொல்வதையெல்லாம் நம்பாதீர்கள். இவர் பணக்கார எழுத்தாளர்களுடன் சேர்ந்து கூத்தடிப்பவர்' என்று நீதிபதி முன் சத்தமிட்டார்.

அம்ரிதாவின் இறுதிக் காலம் நெகிழ்ச்சியூட்டும் விதத்தில் அமைந்துவிட்டது. அவளது சீர்குலைந்த உடம்பு நடமாட முடியாது அவளைப் படுக்கையில் தள்ளிவிட்டது. இந்தக் காலகட்டத்தில் இம்ராஸ்தான் அவளைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்து வந்தான். அவளுக்கு உடை மாற்றுவது, உணவூட்டுவது, சுத்தமாக வைத்திருப்பது ஆகியவற்றை அவன்தான் கவனித்துக் கொண்டான்.

அம்ரிதாவுக்குப் புகழாரம் சூட்டுபவர்கள் எல்லோரும் அவளை முழுதாகப் படித்தவர்கள் அல்லர். வாரிஸ் ஷா பற்றிய கவிதைதான் அவளது உன்னத எழுத்து. பிரமிப்பு ஏற்படுத்தும் அந்த எழுத்து நெடுங்காலம் மறக்கப்படாமல் சிறந்து விளங்கும் என்பதில் சந்தேகம் எதுவுமில்லை. ●

**cyndhujhaa <weenvy@gmail. com>**

# அம்ரிதா பிரீதம் கவிதைகள்

**தமிழில்: ஸிந்துஜா**



## என் முகவரி

இன்று என் வீட்டு எண்ணை அழித்துவிட்டேன்.
தெருவின் பெயரையும்.
திசைக்கொன்றாக வரும் சாலைகளையும்கூட.
அப்படியும் நீ என்னைத் தேடி வர விரும்பினால்
ஒவ்வொரு நாட்டிலும் உள்ள
ஒவ்வொரு ஊரிலும் இருக்கும்
ஒவ்வொரு வீட்டின் கதவையும் தட்டு.
அது ஒரு சாபம்.
சாபவிமோசனமும் கூட.
எங்கு நீ ஒரு சுதந்திரமான
ஆத்மாவைச் சந்திக்கிறாயோ - அதுதான் என் வீடு.



## நான்

பலர் சமகாலத்தவர்.
ஆனால், நான் எனது சமகாலத்தவளல்ல.
நான் அற்று என் பிறப்பு நிகழ்ந்தது.
தட்டில் விழுந்த அவலமான பிரசாதம்.
சிறைப்படுத்தப்பட்ட கதை.

இந்த நாவின் நுனியிலிருந்து வெளிப்படும்
வார்த்தை தன்னையே கொல்கின்றது.
அக்கொலையிலிருந்து தப்பிக்கையில்
ஒருகாகிதத்தில் இறங்கி மடிகிறது.

துப்பாக்கியிலிருந்து வெடிக்கும் சத்தம் –
அது ஹனோய் நகரிலும் என்னைத் தாக்குகிறது.
அது மறுபடியும் பிராக் நகரிலும் வந்து என்னைத் தாக்குகிறது.

புகை எழும்பி மிதக்கையில்
எட்டு மாதக் குழந்தை போல நான் இறக்கிறேன்.
ஒருநாள் எனது நான்
எனது சமகாலத்தவளாக ஆகுமா?

## ஒரு கடிதம்

நான் –
பரணிலுள்ள புத்தகம்.
அது உடன்படிக்கை அல்லது பாட்டுப் புத்தகம்.
அல்லது காம சூத்திராவின் ஓர் அத்தியாயம்.
அல்லது நெஞ்சின் துயர வெளிப்பாடு.
ஆனால், இவற்றில் எதுவும் நானல்லவே
என்றும் தோன்றுகிறது.

ஒரு புரட்சியாளர்களின் கூட்டத்தில்
நிறைவேறிய தீர்மானம்.
அதன் எழுத்துப் பிரதிதான் நான்.
அதில் போலீசின் முத்திரை பதிந்துள்ளது.
ஆனால், அத்தீர்மானத்தை யாரும்
வெற்றிகரமாக நிறைவேற்றவில்லை.
சாதாரண செயல்முறைத் தாளாகிவிட்டது.



இப்போது சில குருவிகள் வருகின்றன
அலகில் வைக்கோல்களுடன்.
என் உடல் மீது உட்கார்கின்றன.
தமது அடுத்த தலைமுறையைப் பற்றிச் சிந்தித்தபடி.
(அத்தகைய சிந்தனை எவ்வளவு அருமையான விஷயம்?)
குருவிகளுக்கு இறக்கைகள் உள்ளன.
ஆனால், தீர்மானங்களுக்கு இல்லை.
(அல்லது தீர்மானங்களுக்கு சந்ததிகள் கிடையா.)

சில நேரங்களில் நான்
யோசித்துப் பார்க்கிறேன் –
என் எதிர்காலம் என்னவென்று.
என் கவலையின் கட்டுக்கள்
விடுவிக்க முயலுகின்றன.
முகர்ந்து பார்க்கையில்
பறவைகளின் எச்ச நாற்றம்.
ஓ, என் பூமியே, என் எதிர்காலமே!
நான் உனது தற்போதைய மனநிலையா? ●

cyndhujhaa<weenvy@gmail.com>

# ந. பெரியசாமி கவிதைகள்



## 1. பிணக்ககற்றல் பேரின்பம்

நீர் நிரம்பிய குளம்
மனம் கவரும் யானையாகிவிடுகிறது
நிழலும் சூழ்ந்திருக்க
சிரிக்கும் குழந்தையின் ஜொலிப்பு
நிழல் படிந்த நீர்
ஊடல் கொண்ட பெண்
ஊடலற்று இருத்தல்
விதையற்ற கனி.
மெய்யாகவோ
பொய்யாகவோ
பிணங்கிக் கிடத்தலை
அகற்றி மகிழச் செய்திட
பிறப்பெடுக்கும் வார்த்தைகள்
கட்டிச் செல்லும் மாய உலகில்
உருக்கொள்ளும் காமம்
உலகறியாதது.

## 2. ஊடல் மரமேறும் வேதாளம்

விடையில்லா கதைக்காக
முருங்கை ஏறும் வேதாளமாய்
எதிர்பாரா கணங்களில்
உரு கொண்டு ஊடலேறுவாள்.
உந்தன் பொருட்டே
நட்சத்திரம் வீழ்கிறதெனத் துவங்கி
நிலவும் மேகத்துள் மறைந்து
உன்னுடனே விளையாடுகிறதென
கற்பனைக்கு எட்டா காரணங்களுக்கு
சொல்லப்படும் சமாதானங்களை
உள் கொண்டு உளம் கனிந்து
மூடப்பட்ட கதவை
முழுமையாக திறக்கும் முன்
மறு கேள்வி மறு சாத்தலென
தொடர்ந்தபடி இருக்கும் விளையாட்டு
முற்றுகொள்ளும் தருணம்
காமத்தின் முத்துகள்
மழைத் துளிகளாகும். ●

**ந. பெரியசாமி** <na.periyasamy@gmail.com>

### ஸ்ரீபதி பத்மநாபா

# ஞாபக நிழல்

**பாலை நிலவன்**

தொண்ணூறுகளின் மத்தியில் ஸ்ரீ எனக்கு அறிமுகம்.

அப்போது கோவை ஞானியின் வீடு காட்டூரில் இருந்தது. அதற்குப் பக்கமே ஸ்ரீ அடிக்கடி வந்துபோகும் வரைகலை நிலையமொன்று இருந்தது. அக்காலத்தைய அவனுடைய நண்பர்களுடன் ஸ்ரீ பெரும் வசீகரனாய் வலம்வந்த காலமது. அவனுக்கென்றே அழகிய ஆடைகளை வானதூதர்கள் தைப்பார்கள் போல. அவனுடைய ஓவியப் பாங்கான தோற்றப் பொலிவும் உடை மிடுக்கும் தனித்துமாய் ஒளிர, அவனோ இலக்கியத்தின் பேரிலும் ஓவியத்தின் பேரிலும் ஆவல் கொண்டிருந்தவனாய், ஞானி வீட்டிற்கும் அவ்வப்போது வந்த போய்க் கொண்டிருந்த ஒரு நாளில், ஞானி வீட்டுப் படிக்கட்டுகளில் இறங்கி நான் சாலையை மிதிக்க, அவனோ தான் ஓட்டி வந்த கைனடிக் ஹோண்டா ஸ்கூட்டரை அதே சாலையின் ஓரத்தில் நிறுத்தி, வானத்தைப் பார்த்துப் புகைத்துக் கொண்டிருந்தான். அந்த ஸ்ரீபதி அப்படியொரு சம்பூரண பேரழகன். அந்தக் காலமும்தான்.



இப்படியே முதலில் ஸ்ரீ எனக்கு அறிமுகம். பின் நண்பனாகினான். ஸ்ரீ எல்லாவற்றையும் பகடியாக எதிர்கொள்வது ஆச்சரியமளித்தது. அனைத்து சம்பவங்களையும் ஒரு ஆள் சதா விளையாட்டாக எடுத்துக்கொண்டால், அந்த நபர் தேவதூதனாகத்தானே இருந்தாக வேண்டும். இன்னொன்று, எதையும் வித்தியாசமாகச் செய்ய வேண்டும்; தலைகீழாக்க வேண்டும் என்கிற உத்வேகம். இந்த குணம்தான் ஸ்ரீயை ஆட்டிப் படைத்தது. இதில் ஒருவர் வசமாக மாட்டிக்கொண்டால் என்னென்ன நேருமோ அதற்கும் அவன்தானே பொறுப்பு. இதுதான் விதி வசமாகுதல்.

நான் பார்க்கையில் ஸ்ரீயை சுற்றி அருமையான ஒரு குடும்பமிருந்தது. ஸ்ரீக்கு திருமணம் பண்ணிப் பார்க்க வேண்டுமென்கிற சரஸ்வதி டீச்சரின் கனவு ஒரு நாள் பலித்தது. அவனுடைய திருமணத்திற்கும் நான் போயிருக்கிறேன். அவனுடைய இணை சரிதா நகைப்பூட்டும் மனதையுடையவர், மகள் பாரதியோ அவனுடைய பூரிப்பில் நிறைந்த முத்து.

ஆரம்பத்திலேயே ஸ்ரீக்கு சென்னையின் மீது ஒரு கண் இருந்திருக்கிறது. அவனும் ஒரு சினிமாக்காரனாக வேண்டுமென்று கொஞ்சம் முயன்றிருக்கிறான். ஸ்ரீயின் மனநிலைக்கு இது இலகுவாக வசப்பட்டிருக்க வேண்டும். அப்படியாகவில்லை. அவன் காணாமல் போன காலத்தில் இங்குதான் அலைந்து திரிந்திருக்கிறான். திருமணத்திற்குப் பிறகு, சில வருடங்களுக்கு முன்பு, லீனா மணிமேகலை அலுவலகத்திலும் பின்னர் 'அம்ருதா' இதழிலும் பணிபுரிந்திருக்கிறான்.

ஸ்ரீக்கு தமிழ்ச் செவ்விலக்கியங்களின் மீது தணியாத ஈர்ப்பு. மலையாள இலக்கிய வாசிப்பும் கூடுதல் பலமென்று சொல்ல வேண்டும். முதலில் ஸ்ரீபதி 'ஆரண்யம்' இதழுக்காக, பாலச்சந்திரன் சுள்ளிக்காடு எழுதிய அவருடைய அனுபவக் கதைகளையே மொழிபெயர்த்தான். அது லயமான மொழிபெயர்ப்பு. பத்மராஜனுடைய, 'ஒரு ஊரில் ஒரு பயில்வான்' திரைக்கதையையும் இதே இதழுக்காகவே மொழிபெயர்த்திருக்கிறான்.

வாசிப்பின் மீதான நேசமே ஒரு எழுத்தாளனின் மொழியின் பாற்பட்ட திசையைத் தீர்மானிக்கிறது. ஸ்ரீபதியின் கவி மொழி இலகுவானது. சந்தக் கவிதைகளின் தியானத்தில் ஊடாடுவது. அது சிலபோது சர்க்கஸ் விளையாட்டிலும் ஆர்வம்கொள்ளும். அதிகமும் ரொமாண்டிக் தன்மை மிகு கவிமனமே ஸ்ரீயினுடையது. ஆரம்பக் காலத்திலேயே ஸ்ரீபதியின் சில கவிதைகள் 'நிகழ்', 'கணையாழி', 'காலச்சுவடு' போன்ற இதழ்களில் பிரசுரம் கண்டிருக்கிறது. சமீப காலமாக ஸ்ரீயின் கவிதைகளில் நுட்பம் கூடியிருந்தது. ஸ்ரீயின் முதல் கவிதைத் தொகுதி 'பூஜ்யம்'. அப்படியொரு வடிவமைப்பிலேயே கருப்பு வெள்ளை அட்டையில் தலைகீழாக வெளிவந்திருந்தது. அதை ஜெயமோகன் வெளியிட்டார்.

ஆரம்பக் காலத்தில் ஒரு ஓவியனாகவும் இடையே பாடலாசிரியனாகவும் ஸ்ரீ வலம் வந்தான். நண்பர்களுடன் சேர்ந்து இசை ஆல்பமும் வெளிக்கொண்டு வந்திருக்கிறான். அதில் எஸ்.பி.பி., வாணி செயராம் போன்றோரும் பாடியிருக்கிறார்கள். புத்தக வடிவமைப்பானாகவும் இருந்திருக்கிறான். கழிந்த இருபதாண்டுகளில் தனிப்பட்ட முறையில் எனக்கான பலவற்றையும் வடிவமைத்திருக்கிறான்

90களின் முடிவில் 2000த்தில் ஸ்ரீபதியும் சுதேசமித்திரனும் சேர்ந்து ''மஹாகவி'' என்கிற பெயரில், வடிவமைப்பு மற்றும் அச்சகப் பணிகளுக்காக வரைகலை நிலையமொன்றை தொடங்கினர் அது கனவால் செதுக்கப்பட்ட அலுவலகம். இருவரும் கலாபூர்வமான ரம்மியத்தை வழிய விடவேண்டி எண்ணி, காணி நிலம் வேண்டும் என்று வேண்டிய பாரதியின் வேட்கையையே ஒரு ஓவியமாக வரைந்து, பிரதான அறையில் மாட்டினர். அதை வரைந்தது



ஷாராஜ். அலுவலகம் கோவையின் பிரதான பகுதியான ராம் நகர், கிராஸ் கட் சாலை, சிங்கப்பூர் பிளாசாவிற்கு நேரெதிரே இருந்தது. வரைகலை நிலையம் மெல்ல மெல்ல ஓர் இடைநிலை இதழுக்கான அலுவலமாக உருமாறிக்கொண்டு வந்தது. சாயங்காலத்திற்குப் பிறகு அலுவலகம் தனது மேலாடையை உருவி வீசினாற் போல வேறு வண்ணத்திற்கு மாறிவிடும்.

சர்ச்சைகளுக்கும் சந்தோஷத்திற்கும் அளவே யில்லை யார் வந்தாலும் அருவியைக் கொட்டும் அலுவலகம். எந்த நிலையிலும் ஸ்ரீபதிக்குக் கோபம் வந்ததில்லை. அப்படி ஒன்று இருப்பதை ஸ்ரீ அறிந்து கொண்டவனில்லை. தனியாய் இருப்பதை அவன் அதிகமும் விரும்புவனுமல்ல. அங்கிருந்துதான் ‘ஆரண்யம்’ இதழ் கொண்டு வரப்பட்டது. முதல் இதழை நடிகர் நாசர் வெளியிட சரஸ்வதி டீச்சர் பெற்றுக்கொண்டார்.

‘தரு’ வெளியீடு என்கிற பெயரில், எனது ‘கடல் முகம்’ கவிதைத் தொகுப்பை சுதேசமித்ரனும் ஸ்ரீயும் அழகாகக் கொண்டுவந்தனர். ‘மஹாகவி’ அலுவலகம் பலரையும் ஈர்த்தது. ஸ்ரீ அன்பால் யாரையும் உருக்கி விடுவான். நானெல்லாம் அங்கு வந்து போய்க்கொண்டிருந்தவனல்ல, அங்கேயே வசித்தவன். கோவை ஞானிக்கு மாற்றாக அங்கே வேறு ஒரு இலக்கியச் சூழல் உருவாகி வந்தது. பல எழுத்தாளர்களும் பல்துறை நண்பர்களும் அங்கு வந்த செல்ல தொடங்கினர் ஞானியும்கூட சிலபோது ‘மஹாகவி’ அலுவலகத்திற்கு வந்து போவார்.

‘ஆரண்யம்’ இதழ் சற்று தூக்கலான வடிவமைப்பில் வித்தியாசமாக அறிமுகமாகி நான்கு இதழ்கள் வெளிவந்திருந்தது. பலரும் இதில் பங்களித்திருக்கிறார்கள்.

பின்வந்த வருடங்களில் ‘மஹாகவி’ அலுவலகம் காலியானது. இக்காலத்தில் ஸ்ரீ நண்பனைத் தாண்டி குடும்பத்தில் ஒருவனாக ஆகியிருந்தான். என் வீட்டில் அவனுக்குக் கதவுகளும் இல்லை, தாழ்ப்பாள்களும் இல்லை. ஸ்ரீயின் தாயார் சரஸ்வதி டீச்சரும் ஸ்ரீயின் சகோதரி காயத்ரி அக்காவும் என் மீது அன்பு பாராட்டினவர்கள். இளம் பருவத்தில் ஊரை விட்டு ஓடிப்போய் திரும்பி வந்தவனென்பதால் ஸ்ரீ அவர்களுக்குச் செல்லமோ செல்லம். இப்போது அந்த அன்புத் தாயுமில்லை. அன்பு சகோதரி இந்த நிலையில்லாத பூமியிலிருந்து விடைபெற்ற ஒரு நாளில், ஸ்ரீபதியும் நானும் சேர்ந்தே அந்த அன்பில் கனிந்த பூதவுடலைப் பூர்வீக வீட்டிற்குக் கொண்டு சென்றோம்.

இறந்தவன் மீது பூமியில் எந்தப் பராதியுமில்லை. ஒரே ஒரு நூலிழையில் ஒரே ஒரு கணத்தில் யாருடைய இதயத்தினுள்ளும் ஸ்ரீ தனியாளாய் நுழைந்து ஆசனமிட்டு அமர்ந்து விடும் வல்லமை பெற்றவன். சென்னைக்குப் போன காலத்தில்தான் ஸ்ரீக்கும் எனக்கும் சற்று இடைவெளி. நவீன கவிதைகள் பற்றிய நான் அதிகமும் எழுத வேண்டுமென்று விரும்பியவன்











ஸ்ரீ. அப்படி ஒரு தொடரை ‘அம்ருதா’ இதழுக்கு அவன் எழுதக் கேட்டபோது நானும் எழுதத் தீர்மானித்து இரண்டு கட்டுரை மட்டுமே எழுதி சோம்பலில் விட்டுவிட்டேன்.

சில வருடங்களுக்கு முன்பு ஸ்ரீயின் உடல் நிலை மிகவும் மோசமடைந்தது. கேரளத்தில் அவனுக்கு சில மாதங்கள் நல்ல சிகிச்சையளித்து அவன் வீட்டார் அவனைப் பிழைக்க செய்தனர். படுக்கையிலிருந்து எழுந்து நடமாடத் தொடங்கியவனை ஒரு நாள் ஆசையாய்ப் பார்க்க போனேன். பழைய ஸ்ரீபதியைக் காணோம். உடல் வாடிச் சுருங்கி வேறு தோற்றத் திலிருந்தான். ஐயோ என்று மனத்தில் கலங்கினேன்.

அவனிடம் ஏராளமான கனவுகள் இருந்தது. அவன் அதை ஆரோக்கியமான காலத்தில் அடையவில்லை. நோய்மையில் பலவற்றையும் சாதிக்கத் துடித்தான். அவன் எழுத வேண்டியதும் மொழிபெயர்க்க வேண்டியதும் இன்னும் இருக்க, அவனோ பெரு வாழ்வைப் பாதியில் கடந்தான்.

ஸ்ரீயிடம் எக்கணமும் ஒரு மந்திர வசியமிருந்தது. அவனுடைய சேட்டைகள் தாங்காமல் ஓடி ஒளிந்து கொள்ளலாம்தான். அவனை நெருங்க நெருங்கவோ அவன் மஹா பரிசுத்தனாய் சுடர் விடுகிறானே, அது ஒன்றுதான் காலத்தில் அவனை நித்தியமாய் நிலைக்க வைத்துள்ளது.

‘முரண்பாடுகளிலும் நாம் உயிர் நண்பர்கள். இளைப்பாறு என் அன்பே’ என்று சொல்லும்போது, உன் அன்பு மகள் பாரதிக்காகவும் வழியும் என் கண்ணீர். இந்த தீராத வலியில் சரிதாவை யாரால் தேற்ற இயலும். காலமே நீ மகா காருண்ணியத்தின் நல் மருந்தாகுக. ●

பாலை நிலவன் <rubenatmusic@gmail.com>

Loving Vincent

# வான் காவை நேசித்தல்

**ராம் முரளி**



"எங்கள் ஓவியங்கள் மூலம் பேசுவதைத் தவிர வேறு எதுவும் எங்களால் பேச முடியாது."

-வின்சென்ட் வான் கா

கலை சார்ந்த ஈடுபாடு கொண்ட எல்லோருக்கும் வெகு பரீட்சயமான பெயர் வின்சென்ட் வான் கா. அவரது ஒரு ஓவியத்தை ஆழ்ந்து உணராதவர்கள்கூட அவரது பெயரை அறிந்து வைத்திருப்பதையும், நேசிப்புடன் அணுகுவதையும் நாம் அறிய முடியும். ஓவியக் கலை சார்ந்து மட்டுமல்லாமல், நுண்கலை எதுவொன்றுடனும் தொடர்புடைய எல்லோரும் மாற்று கருத்தில்லாமல் ஏற்றுக்கொள்ளக்கூடிய மாபெரும் கலைஞன் வான் கா.

பின்-இம்ப்ரஷனிஸ பாணி ஓவியங்களில் பால் செசானுக்கு பிறகு அதிகம் போற்றப்படுபவர், வான் கா. யதார்த்தத்தை மிக தீர்க்கத்துடனும் யதார்த்தத்தில் உறைந்திருக்கும் உணர்வு கொதிப்புகளை அரூப தன்மையுடன் தோற்றுவிப்பதோடு, அழுத்தமான வண்ணங்களில் அதனை வெளிப்படுத்துவது, பொதுவாக பின்-இம்ப்ரஷனிஸ பாணி ஓவியங்கள் என வரையறுக்கப்படுகின்றன.



நிறங்களில் ஒளிரும் உக்கிரத்தை தனது ஓவியங்களில் வசப்படுத்தியவர் வான் கா. வாழ்நாள் முழுவதிலும் வதைத்தெடுத்த பசியினூடாக, அவருக்கு மிக அவசியமாய் இருந்த அன்பு புறக்கணிக்கப்பட்ட போதிலும், தனது வாழ்க்கையை ஓவியங்களாக தொடர்ந்து வெளிப்படுத்தி கொண்டிருந்தவர். கிட்டதட்ட 2 ஆயிரம் ஓவியங்களை தமது பங்களிப்பாக கலை உலகுக்கு வான் கா விட்டு சென்றிருக்கிறார்.

செல்வந்தர் ஒருவரிடம் வற்புறுத்தி விற்ற ஒற்றை ஓவியத்தை தவிர, அவர் வாழ்ந்த காலத்தில் அவரது ஓவியங்கள் எதுவும் விற்றிருக்கவில்லை. இன்று அவரது ஓவியங்கள் பல கோடி ரூபாய்க்கு விற்கப்படுகின்றன. தனக்குரிய அங்கீகாரத்தை கலையுலகம் ஒருநாள் அளித்தே தீரும் என்பதில் திடமான நம்பிக்கை கொண்டிருந்த வான் கா, அவரது சகோதரர் தியோவுக்கு எழுதிய கடிதங்களில் அதனை மீண்டும் மீண்டும் வெளிப்படுத்தியிருக்கிறார்.

சிறு வயது முதலே எவருடனும் அதிக நெருக்கம் பாராட்டாமல் தனிமையில் பீடிக்கப்பட்டிருந்த வான் கா, தமது கடைசி காலம்வரையிலும் அதீத அன்புடன் தொடர்பு கொண்டிருந்தது அவரது சகோதரருடன் மட்டும்தான்.

மதபோதரான வான் காவின் தந்தை, வான் காவும் தன்னைப்போலவே மதம் சம்பந்தப்பட்ட பணியினை ஆற்ற வேண்டுமென்று வற்புறுத்திய போதிலும், அதனை நிராகரித்துவிட்டு ஹாலந்தில் இருந்து வெளியேறி, லண்டனில் உள்ள உறவுக்காரர் ஒருவரது





ஓவிய விற்பனையகத்தில், இளம் வயதில் வேலை செய்ய துவங்குகிறார். வணீக நோக்குடன் வரையப்படுகின்ற ரசனையற்ற ஓவியங்களை அவ்விடத்தில் அவர் சாடுகிறார்.

மதம் சம்பந்தப்பட்ட அவரது கண்ணோட்டத்தை தியோவுக்கு எழுதிய கடிதமொன்றின் மூலமாக நாம் அறிந்துக்கொள்ள முடிகிறது. "நானும் பைபிளை அவ்வப்போது வாசிக்கிறேன். மிச்லே அல்லது பால்ஸாக் அல்லது எலியாட்டை நான் எப்படி எதிர்கொள்கின்றேனோ அவ்விதமாகவே பைபிளையும் நான் வாசிக்கிறேன். ஆனால், தந்தை தனது வாழ்க்கையில் எப்படியெல்லாம் நடந்துக் கொண்டிருக்கிறாரோ, அதிலிருந்து மிகமிக மாறுபட்ட பல விஷயங்களை நான் பைபிளில் பார்க்கிறேன். தந்தை பைபிளிலிருந்து எதனை சுவீகரித்துக் கொண்டிருக்கிறாரோ, அதனை என்னால் பைபிளில் உணர முடிந்ததேயில்லை" என்று கடிதமொன்றில் அவர் குறிப்பிடுகிறார்.

பசியிலும் வறுமையிலும், புறக்கணிப்பிலும் உழலும் மக்களிடம் மதம் தொடர்பான விவாதங்களை எழுப்புவதையும், அதன் நெறிகளை புகுத்துவதையும் எதிர்த்து, வான் கா மிக வேதனையுடன் சகோதரரிடம் அதனை வெளிப்படுத்தியிருக்கிறார்.

எர்விங் ஸ்டோனால் எழுதப்பட்ட 'லஸ்ட் ஃபார் லைஃப்' (Lust for Life) புத்தகத்தில் இடம்பெற்றிருக்கும் வான் காவின் லண்டன் நகர வாழ்க்கை மிகவும் துன்பரகமானது. அங்குதான் அவர் முதலில் காதல் வயப்படுகிறார். கீ என்கின்ற பெண்ணின் மீதான நேசத்தை, அவரிடம் வான் கா வெளிப்படுத்தும்போது, அதனை முற்றிலுமாக கீ நிராகரித்துவிடுகிறார்.

வான் கா வசித்த வீட்டின் உரிமையாளரின் மகள் கீ. இருவரும் அன்பை பரிமாறிக்கொள்கின்றனர். மாலை நடையை சேர்ந்தே கழிக்கிறார்கள். மிக நெருக்கமான தோழியாகவே வான் கா அவரை கருதுகிறார். ஆனால், வான் காவை கீ முறிந்துப்போன தனது முதல் காதலின் வலிகளிலிருந்து மீண்டெழ உதவும் மனிதராகவே கருதினாரே ஒழிய, காதல் வயப்படவில்லை. இது முற்றிலும் வான் காவை நிலைக்குலைய செய்கிறது. முன்னதாகவே தனிமை விரும்பியும் தாழ்வு மனப்பான்மை கொண்டவருமான வான் கா, தன்னை கீ நிராகரித்ததும் மேலும் மேலும் வேதனையில் உழல்கிறார்.

கீ திருமண நிட்சயத்தார்த்தத்தின் போது, சாலையில் அவளது வீட்டை வெறித்தபடி பூங்கொத்துடன் தெரு விளக்கின் வெளிச்சத்தில் பரிதவித்துப்போய் வான் கா நின்று கொண்டிருந்ததை புத்தகத்தில் வாசிக்கையில், மனம் கனத்துப்போகிறது.

இந்த நிகழ்வின் பின்னர் லண்டன் நகரத்திற்கு திரும்பப் போவதில்லை என்பதில் தீர்மானமாக இருந்திருக்கிறார். ஐரோப்பியாவில் மீண்டும் தஞ் சமடைகிறார். இக்காலங்களில்தான் ஓவியங்கள் வரைய துவங்குகிறார். வசிப்பிட வாடகை தொகைக்கும், ஓவியம் வரைய தேவையான உபகாரன பொருட்களுக்கும் தியோவிடம் பணம் கேட்டு கடிதங்கள் எழுதுகிறார். வாழ்நாள் முழுவதிலும் வான் காவின் பண தேவைகளை கணிசமான அளவுக்கு சுமந்துக் கொண்டிருந்தவர் தியோ.

காதலனால் கைவிடப்பட்ட பெண் ஒருத்தியின் தோழமை அவருக்கு கிடைக்கிறது. அப்பெண்ணையும் அவளது குழந்தையையும் தனது அரவணைப்பில் கவனித்துக்கொள்கிறார். ஆனால், துரதிர்ஷ்டவசமாக இவ்வுறவும் அதிக தினங்கள் நீடிக்கவில்லை. மீண்டும் தனிமை அவரது வாழ்க்கையை சூழ்கிறது.

இந்நாட்களில் வான் காவின் சம காலத்திய பின்-இம்ப்ரஷனிஸ ஓவியரான பால் காகினின் வருகை நேர்கிறது. காகினும் அவரது இறப்பிற்கு பிறகே கொண்டப்பட்டவர். காகினை வரவேற்க, தனது வசிப்பிடத்தில் சூரிய காந்தி பூக்கள் கொண்ட ஓவிய தொகுதியை வரைகிறார் வான் கா. அவரது ஓவியங்களிலேயே மிகச் சிறப்பானதென்றும், அதிக புகழடைந்ததும் சூரிய காந்தி பூக்கள் தொகுதிதான்.

அடர்த்தியான மஞ்சள் நிறங்களை, தனது கோடுகளால் தீ ஜுவாலைகளை போல, வான் கா அவ்வோவியங்களில் படைத்திருந்தார். அவரது வாழ்க்கையில் நிலவிய நெருக்கடிகளும் அதன் உண்டாக்கிய கொந்தளிப்பும் தகிப்பும் சூரிய காந்தி பூக்களில் வெளிப்பட்டிருந்தது. அவரது நித்திய தனிமையை அப்பூக்கள் தம்மில் பிரசவித்திருந்தன. காகினே கூட வான் காவின் ஓவியங்களில் மிக சிறப்பானதென்று சூரிய காந்தி பூக்களைதான் குறிப்பிடுகிறார்.

கலை மேதமை கொண்ட இருவர் ஓரிடத்தில் ஒத்திசைவாக வசிப்பதில் எப்போதுமே சிக்கல்கள்





உருவாகியபடியே தானிருக்கும். வான் காவை விட்டு காகின் பிரிகிறார். அவரது பிரிவு வான் காவை மேலும் துயரத்தில் ஆழ்த்துகிறது. வான் காவை பற்றி பெரும்பாலானோர் அறிந்துவைத்திருக்கும் சம்பவமான, காதினை அறுத்துக்கொள்ளும் நிகழ்வு காகினின் பிரிவின் தொடர்ச்சியாகத்தான் நிகழ்ந்தேறுகிறது.

சமீப காலங்களில் அவருக்கு நெருக்கமான விலை மாதர் ஒருவருக்கு, அறுத்த தனது காதினை இரத்தம் சொட்ட சொட்ட எடுத்துச் சென்று, அன்பளிப்பாக கொடுக்கிறார். மனநிலையும் சமன் குலைகின்றது. பித்தேறிய நிலையிலும் ஓவியங்களை தொடர்ச்சியாக வரைந்துக்கொண்டே இருக்கிறார். புறத்தில் நேர்ந்துக்கொண்டிருக்கும் புறக்கணிப்பிலிருந்து ஓவியங்களை கொண்டு மீள முயற்சிக்கிறார். பதற்றமும் எதிர்கால வாழ்க்கையின் மீதான குழப்பங்களும் சூழ்ந்து அவரை அலைக்கழித்துக் கொண்டிருந்தபோதும் மிகுந்த படைப்பூக்கத்துடன் செயல்படுகிறார். வான் காவின் 'நட்சத்திரங்கள் நிறைந்த இரவு' இக்காலங்களில் வரையப்பட்டதே.

ஒளிர்ந்து சுழலும் நட்சத்திரங்கள் உக்கிரத்தன்மை பூண்டுள்ளன. அவை உண்மையில் நட்சத்திரங்களை போலவே காட்சியளிக்கவில்லை. நெருப்பு பந்துகளாக, அக்னி சுழல்களாக நீலமும் மஞ்சளும் கலந்து வானத்தில் பிரகாசிக்கின்றன. அதன் அடியில் நகரம் இரவின் மயக்கத்தில் உறக்கம் கொண்டிருக்கிறது. கருப்பு நிறத்தில் உருக்கொண்டிருக்கும் தேவாலயம் ஒன்று வான் நோக்கி நீண்டிருக்கிறது. நிலைக்கொள்ளாத் தன்மையும் தகிப்பும் கோடுகளில் உறைந்திருக்கின்றன. சீற்றமும், உள கொதிப்பின் வெளிப்பாடாக ஆழமான தனிமையுணர்வும் ஓவியத்தில் படிந்துள்ளது. 'நட்சத்திரங்களுக்கு இடம்பெயரும் நிகழ்வுதான் மரணம்' என எழுதியிருக்கும் வான் கா, இந்த ஓவியத்தை புனித பால் மனநல காப்பகத்தில் இருந்தபடியே வரைந்திருக்கிறார். பைத்திய நிலையின் நிறயுருவாக, மௌனத்தில் உறைந்திருக்கும் அந்த நகரமும், சாவுக்கு பிறகான வருகையை எதிர்நோக்கி சுழலும் நட்சத்திர வெளியின் அரூபத்தன்மையும் கொண்டிருக்கிறது, 'நட்சத்திரங்கள் நிறைந்த இரவு.'

இதற்கு பிறகாக, மனநிலை பிசகியர் என சொல்லி நகரவாசிகளால் ஏளனப்படுத்தப்படுகிறார். சிறுவர்கள்கூட கல்லெறிந்து அவரை அவமானப்படுத்துகிறார்கள். இதன் காரணமாக, அவ்வுர்ஸ் எனும் நிலப்பகுதிக்கு இடம்பெயரும் வான் கா, மிகச் சரியாக ஆறு வாரங்களில் வயிற்றின் இடப்புறத்தில் துப்பாக்கியால் சுட்டுக்கொண்டு, அதற்கு அடுத்த தினத்தில் உயிரிழக்கிறார். அங்கீகாரத்திற்கும் அரவணைப்புக்கும் ஏங்கித் தவித்த வான் காவின் துயருற்ற இதயம் 37ஆவது வயதிலேயே தனது துடிப்புகளை நிறுத்திக்கொண்டது.

மகத்தான படைப்பாளி என இக்காலங்களில் போற்றப்படும் மனிதரொருவர், பசியிலும் பணத் தேவைக்கும் இடையில் ஊடாடியபடியே காலத்தை விஞ்சும் அற்புதங்களை படைத்திருக்கிறார் என்று உணரும்போது கண்கள் பனிகின்றன. ஒருவேளை, தானும் அவரது சகோதரர் தியோவைப் போலவே வணிகத் தொழில்களில் ஈடுபட்டு, பெண்ணொருத்தியை மணந்துக்கொண்டு சராசரியான வாழ்க்கையை வாழ்ந்திருக்கலாம் என்றுகூட தனது இறுதிக்கால கடிதமொன்றில் வான் கா எழுதியிருக்கிறார். ஆனால், காலம் இந்த உன்னத கலைஞனை அவன் வாழ்ந்த காலத்தின் அடையாளமாக, ஓவியக் கலையின் தன்னிகரற்ற பெரும் கலைஞனாக, அவனது உயிர் போன பின்பே ஏற்றுக்கொண்டது.

போலந்து தேசத்தின் தயாரிப்பாக வெளியாகியிருக்கும் 'லவ்விங் வின்சென்ட்' (Loving Vincent) எனும் திரைப்படம், வான் காவின் கடைசி ஆறு வாரங்களை ஆராய்கிறது. 125 ஓவியர்களின் கூட்டு உழைப்பில், கைகளால் வரையப்பட்ட வான் கா பாணி ஓவியங்களின் வழியாக இத்திரைப்படம் உருவாக்கப்பட்டுள்ளது. புகழ்பெற்ற ரஷ்ய திரைப்பட இயக்குனரான அலெக்ஸண்டர் சுக்குரோவ் (Alexander Sokurov) ஓவிய அருங்காட்சியகம் ஒன்றினை மையப்படுத்தி, இடைவெட்டில்லாத ஒற்றை ஷாட்டில் படம்பிடித்த 'ரஷ்ஷியன் ஆர்க்' திரைப்படத்தில், ஓவியங்களில் வரைப்படும் மனிதர்களை, "காலத்தால் சிறைப்பிடிக்கப்பட்ட நித்திய உயிர்கள்" என்று குறிப்பிடுவார். அதுபோலவே, 'லவ்விங் வின்சென்ட்' திரைப்படத்தில் வான் காவால் சட்டகத்தில் கோடுகளாக சீற்றத்துடன் தீட்டப்பட்டிருக்கும் மனிதர்கள் உயிர்பெற்று, தங்களது சிருஷ்டிகர்த்தாவான வான் கா உடனான தமது நினைவுகளை



Hugh Welchman and Dorota Kobiela

பகிர்ந்துக்கொள்கிறார்கள். வான் காவின் கோடுகள் உயிர்பெறுவதைப் பார்க்க சிலிர்ப்பாக இருக்கிறது. திரையில் ஊர்ந்து செல்லும் கோடுகளில் பிரதிபலிக்கிறது வான் காவின் வெறித்த கண்கள். நீலமும் கருப்பும் மஞ்சளும் படம் முழுவதிலும் தீவிர கதியில் அசைவு கொள்கின்றன.

வான் கா தனது சகோதரரான தியோவுக்கு எழுதிய கடிதமொன்றை அவரிடம் சேர்க்க, பயணப்படும் தபால் நிலைய ஊழியர் ஒருவரின் மகனான ஆர்மண்ட் எதிர்கொள்ளும் அனுபவங்களே இத்திரைப்படம். வான் கா இறந்து இரண்டு வருடங்கள் கடந்த பிறகு,இத்திரைப்படம் துவங்குகிறது. ஆர்மண்டும் வான் காவால் ஓவியமாக தீட்டப்பட்டவனே. அதிக உறுதியும் துணிச்சலும் மிகுந்தவனான ஆர்மண்ட் திரைப்படத்தின் துவக்கத்தில் வான் காவின் மீது அதிக பிடிப்பில்லாமலேயே இருக்கிறான். கடிதத்தை சுமந்து திரிவதில்கூட அவனுக்கு பெரியளவில் விருப்பமில்லை. ஆனால், அவனது தந்தை அவனை நிர்பந்திக்கிறார். அவனது தந்தையை தஸ்தயேவ்ஸ்கியுடன் ஒப்பிட்டு வான் கா பேசியிருக்கிறார். கரிசனமும் நட்புணர்வும் கொண்ட ஆர்மண்டின் தந்தை வான் காவால் இறுதி காலத்தில் நேசிக்கப்பட்ட உயிர்களில் ஒருவராக இருந்திருக்கிறார்.

இறப்பிற்கு ஆறு வாரங்களுக்கு முன்னதாக வான் கா தனக்கு எழுதிய கடிதத்தில் மிகுந்த தன்னம்பிக்கையுடன் இருப்பதாக, தெளிந்த மனநிலையில் எழுதியிருப்பதாகவும், அதற்குள் அவர் மரணம் செய்துக்கொண்டது விநோதமாக இருப்பதாகவும் ஆர்மண்டின் தந்தை அவனிடம் சொல்கிறார். வான் காவின் மரணத்தின் மீதான புதிர் அவனை முன் செலுத்துகிறது.

வான் கா தொடர்புடைய ஒவ்வொருவராக சந்திக்கிறான். ஓவிய விற்பன்னர் ஒருவரை சந்திக்கும்போது, வான் காவிடம் மிக நெருக்கமாக இருந்த, மருத்துவர் கேஜ்ஜட்டை சந்திக்குமாறு அவர் பரிந்துரைக்கிறார். மருத்துவரை தேடி செல்லும் பயணத்தில், வான் கா தனது இறுதி நாட்களை செலவிட்ட கோதுமை வயல்கள், நீர் நிலைகள், வான் கா உயிர்விட்ட அறை என ஆர்மண்ட் ஒவ்வொரு இடமாக சென்று வான் காவுடனான தங்களது அனுபவங்களை அங்கிருக்கும் மனிதர்களிடம் பகிர்ந்துக்கொள்ள உந்துகிறான். முன்னுக்குப்பின் முரணான தகவல்கள் அவனுக்கு கிடைக்கின்றன. அதனால், வான் கா தற்கொலை செய்துக்கொள்ளவில்லை, கொலை செய்யப்பட்டிருக்கிறார் என்பதாக ஆர்மண்ட் தனக்குள் தீர்மானமாக நம்ப துவங்குகிறான்.

வான் கா இறந்து இரண்டு வருடங்கள் உருண்டோடி விட்டன என்றாலும், இன்னமும் அவரது கல்லறையில் மலர்களை வைப்பதை தீவிரமாக கடைப்பிடித்துவரும் மருத்துவர் கேஜ்ஜட்டின் மகளிடம், ஆர்மண்ட் தனது கண்டுப்பிடிப்புகளையும் யூகங்களை விவரிக்கும்போது, அவள், "நீ வான் காவின் இறப்பை பற்றித்தான் அதிக ஆர்வத்துடன் இருக்கிறாய், அவரது வாழ்க்கையை பற்றி அல்ல" என்று அவனது யூகங்களில் ஆர்வமில்லாமல் அவள் மறுக்கிறாள். ஆர்மண்டுக்கு இந்த சந்திப்புகளின் மூலமாக வான் கா மீது அவன் கொண்டிருந்த எண்ணங்களில் மாற்றமேற்படுகிறது.

மருத்துவர் கேஜ்ஜடை சந்தித்ததும், வான் கா மரணத்தின் புதிர்கள் அவிழ்கின்றன. மருத்துவருக்கும் வான் காவுக்கும் ஏற்பட்ட வாய் தகராறில், வான் காவின் இருப்பு என்பது தியோவுக்கு பெரும் சுமையாக இருக்கிறது என அவர் கோபத்தில் உரக்க குரலெழுப்பியதாகவும், அதன் தொடர்ச்சியாகவே வான் கா தற்கொலையை



Hugh Welchman and Dorota Kobiela

நோக்கி சென்றுவிட்டதாகவும் அவர் சொல்கிறார்.

தியோவுக்கு தான் சுமையாய் இருப்பதை ஆரம்ப காலங்களிலிருந்தே வான்கா உணர்ந்துதான் இருந்தார் என்றாலும், தனது கலையின் மீதான நம்பிக்கையினால் அந்த எண்ணங்களை அவர் எளிதாக கலைந்தபடியே இருந்திருக்கிறார். கலை மிக விரைவில் பொருளாதார ரீதியாக அவரை மேலுயர்த்தும் என்பதில் அதிக உறுதியுடன் இருந்தவர் வான் கா. ஆனால், மருத்துவர் வான்காவை குற்றஞ்சாட்டிய தருணத்தில், உடலளவிலும் மன அளவிலும் மிக குன்றிய நிலையிலேயே வான் கா இருந்தார். தொடர் புறக்கணிப்பும் அங்கீகாரமற்ற நிலையும், நிகழ்காலத்தின் மீதான ஐயமும் அவரை கடைசி ஒரு வருட காலம் வதைத்தெடுத்தபடியே இருந்திருக்கிறது.

முடிவில், கோதுமை வயல்களின் மிளிரும் மஞ்சள் வெளியில் கருப்பு உருக்களென திரிந்தலையும் காகங்களின் சாட்சியமாக வான் கா துப்பாக்கியால் தனதுஉடலில் சுட்டுக்கொண்டு உயிரை துறந்துவிட்டார். ஆர்மண்ட் மருத்துவரின் மூலமாக அறிந்துக்கொண்ட தகவலுடன், தன் கைவசமிருந்த கடித்தத்தை தியோவின் மனைவிக்கு அனுப்புவதோடு தன் ஊருக்குதிரும்புகிறார். ஏனெனில், வான் கா இறந்த சில காலங்களுக்குள் தியோவும் இறந்துவிட்டார்.

கால்கள் பெயரறியா நிலவெளிக்குள் ஊர்ந்து அலைந்துக் கொண்டிருப்பினும், தினங்களும் பொழுதுகளும் மாய சுவரொன்றை இடையில் எழுப்பியிருப்பினும், சொற்களின் மூலமாக தம் வாழ்நாள் முழுவதிலும் தொடர்பு கொண்டிருந்தனர் சகோதரர்கள் இருவரும். வான் கா தனது அந்தரங்க பிரதியாகவே தியோவை கருதியிருந்தார். வான் காவின் அலைச்சல்களால் தகித்துக்கொண்டிருந்த மனதினை அவரது ஓவியங்களை தவிர்த்து, நாம் தியோவுக்கு எழுதிய கடிதங்களின் மூலமாகவே அறிந்துக்கொள்ள முடிகிறது.

டோராட்டா கோபியலா (Dorota Kobiela) எனும் ஓவிய கலைஞர், ஹக் வெல்ச்மேன் (Hugh Welchman) கூட்டு இயக்கத்தில் உருவாகியிருக்கும் ‘லவ்விங் வின்சென்ட்’ அவர்களது ஐந்து வருட கால தொடர் உழைப்பில் உருவாகியுள்ளது. முன்னதாக குறும்படமாகவே அவர்கள் இப்படத்தை இயக்க முடிவு செய்திருந்தனர். பின்னர் பொருளாதார ரீதியிலான உதவியும், படத்தை பற்றிய அறிவிப்புக்கு கிடைத்த வரவேற்பும் அவர்களை லவ்விங் வின்சென்ட்டை முழு நீள திரைப்படமாக உருவாக்கும் எண்ணத்தை உண்டாக்கியிருக்கிறது. கடைசி வருடங்களில் வான் கா தீட்டிய ஓவியங்களை மட்டுமே இவர்கள் பயன்படுத்திக் கொண்டனர். வான் காவின் நினைவுக் கதைகள் கறுப்பு வெள்ளையிலும் நிகழ்காலம் வண்ணத்திலும் வரையப்பட்டு திரைப்படமாக உருவாக்கப்பட்டிருக்கிறது. வான் கா தனது ஓவியங்களில் பிரயோகித்த தகிப்பு நிலையை இவர்களும் திரையில் கொண்டு வந்திருக்கிறார்கள். திரையில் அசையும் வண்ணங்களை தரிசிக்கையில், வான் கா மீதான வியப்பு அதிகரித்தபடியே இருக்கிறது.

தியோவுக்கு வான் கா எழுதிய கடிதமொன்றில், “எப்போதும் வாழ்க்கையில் இருளும் துன்பமும் மட்டுமே மிகுந்திருக்கும் என ஒருவன் நினைக்கக்கூடாது. அவ்வாறே அவன் எண்ணுவான் என்றால், பிரக்ஞை அழிந்த பைத்தியமாகி விடுவான். அதற்கு மாறாக, தன்னம்பிக்கையுடன் தமது பணிகளில் கவனத்தை குவிக்க வேண்டும். நன்மையையும் தீயவற்றையும் சரி நிகராகஎடுத்துக்கொள்ள பழகவேண்டும். வாழ்க்கையில் நம்மால் புரிந்துக்கொள்ள முடியாத விஷயங்கள் நிறைய இருக்கின்றன. வாழ்க்கை கதைகளில் வருவதைப்போல எளிமையானதாகவோ, தேவாலயங்களில் பாதிரியார்கள் சொல்வதைப்போல சாதாரணமாகவோ இருந்துவிட்டால், மனிதன் தன் வாழ்க்கையில் முன்னேற இந்த அளவுக்கு துயரையும் இருட்டையும் சந்திக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் உண்மையில் வாழ்க்கை அப்படியா எளிமையானதாக இருக்கிறது?” என்று எழுதியிருக்கிறார்.

துயரத்தின் திண்மை அதிகரிக்க அதிகரிக்க ஒருவரது உடல் அதனை சகித்துக்கொள்ளும் ஆற்றலை இழந்துவிடுகிறது. வான் காவுக்கும் நேர்ந்ததும் அதுவேதான். உயிரை மாய்த்துக்கொள்ளும் நிலை வரையிலும் அவரை துயரம் துரத்தியபடியே இருந்தது.

வாழ்நாளெல்லாம் நிம்மதியான உறக்கமும், நிலைத்த வசிப்பிடமும் பசியாற உணவும் கிடைக்கப் பெறாத நிலையிலும், உள்வெறியுடன் ஓவியங்களை படைப்பூக்கத்துடன் படைத்த பெரும் கலைஞன் வான் கா. மகத்தான அக்கலைஞனை அவரது ஓவியங்களை பின் தொடர்ந்து செல்வதன் மூலமாக அறிந்துக்கொள்ளும் பேருவகையான உணர்வை உண்டாக்குகிறது ‘லவ்விங் வின்செண்ட்’ திரைப்படம். ●

ராம் முரளி <raammurali@gmail.com>

# பின்நகர்ந்த காலம்

**வண்ணநிலவன்**

இயக்குநர் ருத்ரையாவுடைய மூன்று அண்ணன்களில் ஒருவர் குருலிங்கம். அவர்களுடைய குடும்பம் ஆத்தூரில் (சேலம்) இருந்தபோது குருலிங்கம் மார்க்சிய - லெனினிய நூல்களை படித்துவிட்டு மார்க்சிஸ்ட் லெனினிஸ்ட் ஆனார். இதனால், குருலிங்கம் காவல்துறையின் கண்காணிப்புக்கு உள்ளானார். இத்தனைக்கும் ருத்ரையாவின் அப்பா ஒரு போலீஸ் கான்ஸ்டபிள்!

ருத்ரையாவின் லயிட்ஸ் காலனி அறையில், அவருடன் சிறிது காலம் இருந்தபோது, அவர் வாங்கி வைத்திருந்த பெட்ராண்ட் ரஸ்ஸலின் நூல்கள், டாக்டர் ராதாகிருஷ்ணனின் நூல்களை எல்லாம் படித்திருக்கிறேன். அங்கே படித்த டாக்டர் ராதாகிருஷ்ணனின் Present Crisis Of Faith என்ற புத்தகம் எனக்கு மிக விருப்பமானது. அதைப் படித்தபோது வேதங்கள், உபநிஷத்துக்களை எல்லாம் படிக்க வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது.



ஸ்ரீ வைகுண்டத்தில் சித்தப்பா வீட்டில் தங்கி ஏழாவது படித்துக் கொண்டிருந்தபோது, கோவிலில், சேங்காலிபுரம் அனந்தபுராம தீக்ஷதரின் ராமாயண உபன்யாசத்தை என் ஆச்சியுடன் போய்க் கேட்டிருக்கிறேன். ஆனால், நமது இதிகாசங்கள் கூறும் வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படைகளை, குறிப்பாக வேதங்களைப் பற்றித் தெரிந்துகொள்வது கடினமாக இருந்தது. தி. ஜானகிராமன், 'அம்மா வந்தாள்' நாவலில் ஒரு இடத்தில் வேதத்திலிருந்து சில வரிகளை எடுத்து எழுதியிருப்பார். சென்னை கன்னிமாரா நூலகத்தில் ரிக் வேதத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு இருந்தது. அதை எடுத்து வந்து படித்தேன். அதில் எல்லாமே துதிகளாகவே இருந்தன. இந்திரனைத் துதிப்பது, வருணனைத் துதிப்பது, உஷையைத் துதிப்பது என்று இருந்தன. அத்தனையும் அழகு செறிவுமிக்க கவிதைகள்.

ஒருநாள் எடிட்டர் (சோ), 'நாளை முதல் டி.டி.கே. ஆபீஸில் சங்கர நாராயணனென்று ஒருத்தர் ஹிந்து மதத்தைப் பற்றி லெக்சர் பண்ணப் போறார். நீங்க வர்றீங்களா' என்று என்னிடம் கேட்டார். இதைத்தானே நான் தேடிக் கொண்டிருந்தேன். உடனே சரியென்று சொல்லிவிட்டேன். தினசரி மாலை ஆறு மணிக்கு ஆழ்வார்பேட்டையிலுள்ள டி.டி.கே. அலுவலகத்தில் அந்த லெக்சர் நடந்தது. எடிட்டருடன் நானும் சென்று அந்தச் சொற்பொழிவைக் கேட்டேன்.

பதினைந்து நாட்கள் நடந்தன. வாஷிஸ்ட கணபதி என்ற யோகியும் பெரும் வேதாந்த புலமையுமிக்க ஒருவரின் நினைவாக அந்தச் சொற்பொழிவுகளை சங்கரநாராயணன் நிகழ்த்தினார். வேதங்கள், உபநிஷத்துக்கள் இவற்றிலுள்ளதை ஆதியோடந்தமாக விளக்கி, எளிய ஆங்கிலத்தில் கூறினார். அபாரமான சொற்பொழிவு. மடைதிறந்த வெள்ளமென ஆறு மணி முதல் எட்டு மணி வரை பேசுவார். இதிகாசங்கள் எப்படி வந்தன, புராணங்கள் எப்படி வந்தன என்பனவற்றையும் பற்றிப் பேசினார். தான் சேகரித்து வைத்திருந்த அறிவையும் ஞானத்தையும் சங்கர நாராயணன் அருவி போல் பதினைந்து நாளும் கொட்டினார். அந்த லெக்சரை ஏற்பாடு செய்தவர் டி.டி.கே. குழுமத்தின் தலைவரான டி.டி. வாசு. அவரும் தினசரி தவறாமல் லெக்சருக்கு வந்துவிடுவார்.

என் அறிவு, தீவிரமான விஷயங்களைத் தேடியது. புரிந்துகொள்ளக் கடினமான விஷயங்களைத் தேடிப்பிடித்து படிப்பதில் ஆர்வம் காட்டியது. அதனால்தான் மர்க்ஸிய அரசியலையும் பொருளாதாரத்தையும் புரிந்துகொள்ள மார்க்சிய வகுப்புகளுக்குப் போனேன். அது போலத்தான் சங்கர நாராயணனின் சொற்பொழிவுகளுக்கும் சென்றேன்.



எல்லா மதங்களிலும் அந்த மதங்களுக்கே உரிய மூலநூல்கள் உள்ளன. இஸ்லாமியர்களுக்கு குரான், கிறிஸ்தவர்களுக்குப் பைபிள், ஹிந்துக்களுக்கு வேதங்களும் உபநிஷத்களும் புராண இதிகாசங்களும். பைபிளை இரண்டு முறை என் பள்ளி நாட்களிலேயே வாசித்திருக்கிறேன். இப்போது ஹிந்து மதத்தில் நாட்டம் வந்தபோது, பேசாமல் கோவிலுக்குச் செல்வது, தேவாரம் படிப்பது என்று பக்தி வழியில் இறங்கி யிருக்கலாம். ஆனால், தீவிரமான அறிவை விரும்பும் என் மனம் பக்தியை விட்டுவிட்டு அறிவுத் தோட்டத்தில் ஈடுபட்டது. மார்க்சியத்தில் ஈடுபாடு வந்தபோது மார்க்சிய நூல்களாக வாஞ்கிக் குவித்தது போல் இப்போது உபநிஷத்துகளையும் ஆதிசங்கரருடைய வியாக்கியானங்களையும் விவேகானந்தரின் ஞானதீப வால்யூம்களையும் வாங்கிக் குவித்தேன்.

பகவத்கீதை மட்டுமே என்னிடம் பல உரைகள் இருந்தன. சங்கரரின் கீதை உரை, வினோபாஜியின் கீதைப் பேருரைகள், திருப்பராய்த்துறை தபோவனம் வெளியிட்ட கீதை உரை, பாரதியார் மொழிபெயர்த்த பகவத்கீதை என்று பல உரைகளைச் சேகரித்துப் படித்தேன். ஆனால், பக்தி மட்டும் வரவில்லை. மாணிக்கவாசகரைப் போல் சிவனை நினைத்து மனம் கசிந்துருக மறுத்தது. பக்திதான் இறுதி, சிறந்தது என்று நான் படித்த எல்லா நூல்களுமே கூறின. ஆனால், மனம் பக்தியிலும் வழிபாட்டிலும் ஈடுபட மறுத்தது. இன்றும் இதுதான் நிலை.

இந்த அண்ட சராசரங்களை சிருஷ்டித்த சக்தி ஒன்று எல்லாவற்றுக்குப் பின்னும் செயல்படுவதை நான் நம்புகிறேன். ஆனால், அந்தப் பரம்பொருள் நம்முடைய அன்றாட லௌகீக வாழ்வை வழி நடத்துகிறது என்பதை மனம் ஏற்க மறுக்கிறது. ஆன்மீகம், பக்தியின் அடிப்படையே, வேண்டுதலும் வேண்டுதல் நிறைவேற வழிபாடுகளும்தான். எனக்கு கடவுளிடம் கேட்கவும் வேண்டிக் கொள்ளவும் எதுவுமில்லை. அதனால், குடும்பத்தினரின் வற்புறுத்தலுக்காக எப்போதாவது அவர்களுடன் கோவிலுக்குச் செல்கிறேன். கோவிலில் நான் கடவுளை, பரம்பொருளைப் பார்க்கவில்லை. வெறும் கற்சிலைதான் கண்ணில் படுகிறது. என்னுடைய கடவுள் நம்பிக்கை கோவிலிலும் வழிபாட்டிலுமில்லை. ஏதோ ஒரு பராசக்தி இத்தினைக்குள்ளும் உறைந்து



அ.முத்துலிங்கம்



ஜெயபாலன்

செயல்படுகிறது என்ற, சடங்குகள் தவிர்த்த உணர்தலாக மட்டுமே, அது உள்ளது. பழுத்த ஆன்மீகவாதிகள் இதை நாத்திகவாதம் என்றே கருதலாம்.

ஆனால், வெளிநாடுகளைவிட இந்தியாவில் மக்களிடம் பக்தியும் வழிபாடும் அதிகம். அமெரிக்காவில் கூட்டம் கூட்டமாகச் சர்ச்சுகளுக்குச் செல்லும் கிறிஸ்தவர்கள் இல்லை. ஆனால், இந்தியாவில் அப்படியல்ல. ஹிந்துக்கள், கிறிஸ்தவர்கள், இஸ்லாமியர்கள், எல்லோருமே இந்தியாவில் பெருவாரியாக வழிபாடுகளில் ஈடுபடுகின்றனர். இப்போது காஞ்சிபுரத்தில் அத்திவரதரைப் பார்க்க கூட்டம் அலைமோதுகிறது. எனக்கு அத்திவரதர், வெறும் மரப் பொம்மை என்றுதான் தோன்றுகிறது.

திருவிழாக்களுக்கு மட்டும் இந்தியர்கள் கூடவில்லை. அரசியல் கூட்டங்களிலும் பெரும் கூட்டம் சேருகிறது. பிற நாடுகளில் ஆன்மீக அடிப்படையில் கூடுகிறவர்களைவிட அரசியல் காரணங்களுக்காகக் கூடுகிறவர்கள் அதிகம் இருக்கிறார்கள். 'கூடுவதில்' மனித மனம் இன்புறுகிறது. ஒரு லகரி ஏற்படுகிறது. திருமணம், பிறந்தநாள், கோவில் திருவிழாக்கள், அரசியல் என்று ஏதாவது காரணங்களுக்காக மனிதர்கள் கூட்டமாகக் கூடும் போது மகிழ்கிறார்கள். தங்களை பலசாலிகளாக உணருகிறார்கள். இந்த மகிழ்ச்சி மனிதர்களுக்குத் தேவைப்படுகிறது.

'துக்ளக்' ஆரம்பிக்கப்பட்ட போது அதைப்போன்ற சமூக - அரசியல் பத்திரிகை எதுவுமில்லை. முழுக்க முழுக்க சமூகப் பிரச்சினைகள், அரசியல் இவற்றை மட்டுமே அன்றும் சரி, இன்றும் சரி 'துக்ளக்' எழுதி வருகிறது. இடையே 'போஸ்ட் மார்ட்டம்' என்ற பேரில் சினிமா விமர்சனங்கள் வந்ததுண்டு.

'ஜூனியர் விகடன்', 'தராசு', 'நக்கீரன்' போன்ற பத்திரிகைகள் துக்ளக்கிற்குப் பின் வெளிவர ஆரம்பித்தவை. 'ஜீனியர் விகடன்' ஆரம்பிக்கப்பட்டபோது பலரும் துக்ளக்கின் சர்க்குலேஷன் குறைந்துவிடும் என்று கூறினர். துக்ளக்கில் பணிபுரியும் நாங்களும் அப்படித்தான் எதிர்பார்த்தோம். ஆனால், ஆச்சரியப்படும் படியாக அப்படி எதுவும் நடைபெறவில்லை.

1983இல் இலங்கையில் கலவரம் ஏற்பட்டது. வெளிக்கடை சிறைச்சாலை உடைக்கப்பட்டது. பலர் இலங்கை யிலிருந்து அகதிகளாக வெளியேறினார்கள். ராமேஸ்வரத்தில் இலங்கை அகதிகள் குவிந்தனர். அப்போது தமிழ்நாட்டில் அதிமுக ஆட்சி நடந்து கொண்டிருந்தது. எம்.ஜி.ஆர். முதல்வர். இலங்கை யிலிருந்து அமிர்தலிங்கம் போன்ற வலதுசாரி ஜனநாயகவாதிகளும், சிறுசிறு போராளிக் குழுக்களாக இயங்கி வந்த உமா மகேஸ்வரன், பிரபாகரன், பத்மநாபா, வரதராஜப் பெருமாள் போன்றோரும் தங்கள் தொண்டர்களுடன் இந்தியாவுக்கு அகதிகளாக வந்து தமிழ்நாட்டில் குடியேறினார்கள்.

அப்படி வந்தவர்களில் இலங்கையின் சிறு பத்திரிகை இலக்கிய உலக நண்பர்களும் அடக்கம். செ. யோகநாதன், காவலூர் ஜெகநாதான், மாத்தளை



நித்தியானந்தம்

சோமு, நித்தியானந்தம், நிர்மலா நித்தியானந்தம் பத்மனாப ஐயர், ஆதவன் போன்றோரும் அடக்கம். இவர்களுள் நித்தியானந்தத்துடன் எனக்கு நெருக்கம் ஏற்பட்டது. ஆதவனும் அவரும் குடும்ப நண்பர்களாகவே ஆனார்கள். நித்தியானந்தம் இலங்கையில் பேராசிரியராக இருந்தவர். அருமையான மனிதர். காவலூர் ஜெகநாதன் என்னைப் பேட்டி கண்டு வீரகேசரிக்கு அனுப்பினார். சிறிது நாட்களில் அவர் கொலையுண்டு இறந்து போனார்.

செ. யோகநாதனும் மாத்தளை சோமுவும் சென்னையில் எழுத்தாளர்களாகவும் பத்திரிகையாளர்களாகவும் செயல்பட்டார்கள். மாத்தளை சோமு தோட்டத் தொழிலாளர் வம்சத்தவர். பிறகு அவர் ஆஸ்திரேலியாவுக்குச் சென்றுவிட்டார். ஆதவன் டென்மார்க்கில் குடியேறினார். நித்தியானந்தம் தமிழ்நாட்டிலேயே வெகுகாலம் இருந்தார். அவருக்குப் பூர்வீகம் புதுக்கோட்டை மாவட்டம். நிர்மலா நித்தியானந்தமும் பத்மனாப ஐயரும் பிரிட்டனில் குடியேறினார்கள். பிறகு நித்தியானந்தமும் பிரிட்டனுக்கு சென்ற நினைவு.

ஒருநாள் சென்னை பாண்டி பஜாரில் உமா மகேஸ்வரனும் பிரபாகரனும் பட்டப்பகலில் துப்பாக்கிச் சண்டையில் ஈடுபட்டார்கள். இலங்கைப் போராளி குழுக்கள் சதாசர்வ காலமும் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொண்டன. அதன் வெளிப்பாடுதான் பாண்டிபஜார் துப்பாக்கிச் சண்டை. பாலசிங்கத்தின் வீட்டில் குண்டு வெடித்தது. சென்னை விமான நிலையத்தில் குண்டு வெடித்ததில் பலர் மரணமடைந்தனர், பலருக்குக் காயம். எல்லாம் இலங்கைப் போராளிகளால் வந்த வினை.

இந்திய அரசும் தமிழக அரசும் இலங்கைப் போராளிகள் விஷயத்தில் அவர்களுக்கு ஆதரவாகவே நடந்து கொண்டன. அவர்களை எம்.ஜி.ஆரோ, கருணாநிதியோ, அப்போது பிரதமராக இருந்த ராஜீவ்காந்தியோ கண்டிக்கவேயில்லை. மத்திய அரசு அவர்களுக்கு ஆயுதப் பயிற்சியே அளித்தது. இலங்கைப் பிரச்சினை, இலங்கையின் உள்நாட்டுப் பிரச்சினை. அகதிகளாக வந்தவர்களுக்குத் தங்குமிடம் உணவு எல்லாம் தரலாம். ஆனால், ஆயுதப் பயிற்சியளித்தது தவறு. இந்தத் தவறை மத்திய அரசே செய்தது. தமிழ்நாட்டில் எம்.ஜி.ஆர், கருணாநிதியின் செல்லப் பிள்ளைகளாகப் போராளிக் குழுக்களின் தலைவர்கள் இருந்தனர்.

இலங்கைப் போராளிக் குழுக்கள் தங்களுக்குள்ளேயே சண்டையிட்டதில் ஒருவரை ஒருவர் கொன்றனர். பிளாட் தலைவரான உமா மகேஸ்வரன்,டெலோ தலைவரான பத்மநாபா எல்லாம் கொல்லப்பட்டது இப்படித்தான். எல்லோரையும் கொன்று குவித்த பிரபாகரனும் கொடூரமான முறையில் இறந்தார். இலங்கையில் சிங்களவர்களுக்கும் தமிழர்களுக்குமான மோதல் இன்றும்கூட நீறு பூத்த நெருப்பாகத்தான் இருக்கிறது.

ஒருநாடு கண் முன்னாலேயே சின்னா பின்னமானது. இலங்கைத் தமிழர்களில் எத்தனையோ லட்சம் பேர் போரில் இறந்துவிட்டனர். கோடிக்கணக்கானோர் சொந்த ஊரைவிட்டு எங்கெங்கோ அயல் தேசங்களில் அகதிகளாக வாழுகின்றனர். அவர்களுடைய ஊர் நினைவுகளை, வீடுகளை, பேசித் திரிந்த தெருக்களை விட்டு எங்கோ அர்த்தமின்றி வாழுகிறார்கள்.

அப்பாவுடைய வேலைக்காக திருநெல்வேலிக்குக் குடிபெயர்ந்த போது தாதன்குளத்தை மறக்க முடியவில்லை. பிழைப்புக்காகச் சென்னைக்கு வந்தபிறகு திருநெல்வேலியை மறக்க முடியவில்லை. அமெரிக்காவில் மகன் வீட்டில் இருக்கும்போது சென்னை ஞாபகம் வந்துகொண்டே இருக்கிறது. வண்ணதாசன், விக்கிரமாதித்யன், கலாப்ரியாகூட அவர்கள் பால்ய நாட்களில் வாழ்ந்த ஊர்களில் இப்போது இல்லை. குடிபெயர்தல் என்பது துக்ககரமானது. அதுவும் பிழைப்பின் நிமித்தம், சொந்த மண்ணிலேயே வேறு ஊரில் அகதிபோல் வாழ்வது போல், பூமியெங்கும் குடிபெயர்ந்து சென்றுவிட்டார்கள்.

வ.ஐ.ச. ஜெயபாலன் நார்வேயிலும் ஆதவன் டென்மார்க்கிலும் அ.முத்துலிங்கம் கனடாவிலும் வாழ நேர்ந்ததை என்ன சொல்ல? எவ்வளவு துரதிருஷ்டமானது அவர்களுடைய வாழ்க்கை? வசதிகள் இருக்கலாம். ஆனால், வாழ்வு என்பது வசதியல்ல. ●

**(சிறு இடைவெளிக்குப் பின் தொடரும்)**

**வண்ணநிலவன் <ramachandran.u49@gmail.com>**

# டி. கண்ணன் கவிதைகள்



## புகழ்

பக்கத்து தோட்டத்திலிருந்து வாளியில்
தண்ணீரை நிரப்பிக்கொண்டு
பலமுறை அலைந்து தன் தொட்டியில்
நிரப்பிக் கொண்டிருந்தான்
நிரம்பியது தொட்டி
நீர் தீரும் வரை அழுந்த குளித்தான்
இங்கேயே குளிக்கலாமே?
என்றாள் பக்கத்து தோட்டப் பாட்டி
அதற்கு பதில் அன்றைக்கு இல்லை
ஆனால், ஆழத்தில் என்றைக்கும் உண்டு

## அதிதி வருகை (அல்லது) ருசியின் எதிர்-விதி

நேற்றைய கல்யாணத்தில்
வாழைக்காய் - கொத்துக்கடலை கூட்டு
கொத்தவரங்காய் பருப்பு உசிலி
மேலும் ஜவ்வரிசி பாயசம்
அழுந்த பிடித்தாள்
இன்று வீட்டிற்கு அதிதிகள் அந்தனர்
பாய் விரிக்கப்பட்டது
இலைகள் பரிமாறப்பட்டன
வாழைப்பழத்துண்டு பருப்பு
பரிமாறும்போது
ஒன்பது கஜத்திலிருந்து (மடிசார்) ஒரு
வினோத சப்த வாசனை பூமி விழுந்து படர்ந்தது
அடுத்து அன்னம் பரிமாற ஆள் வரவில்லை
சமையலறையில் போதிக்கப்பட்ட பெண்மையின் தூக்கு
அதிதி நுழைந்தார்
அதிதிகள் கலைந்தனர்

## நகுலனின் அணில்கள்

ஊரின் மேற்கு புறத்தில்
தோப்புகள்
மனைகளுக்காய் அழிக்கப்பட்டன
அங்கிருந்த அணில்கள்
இடம்பெயர்ந்து
என் தோட்டத்தில்
குடியேறின
வந்த சில நாட்களில்
ஒவ்வொன்றாய் மரணித்தன
வாழத்தான் வந்தன
அந்த அணில்கள்
வாழாமல் போயின



# இறந்த பின்னும்

அன்று அமாவாசை
தம்பி வெளியூர் பயணம்
குடும்ப வாத்தியாருக்கு 'தீட்டு'
பகல் பத்து மணிக்கு
அப்பா வந்தார்
வயிறு காய்ந்திருந்தது
'ஏழை ஏதலன் கீழ்மகன்'*
என உச்சரித்துக் கொண்டிருந்தார்
என்ன வேணும் என எரிச்சலுடன்
கேட்டேன்
ஒன்றும் கூறாமல் நகர்ந்து விட்டார்
மொட்டை மாடியில் காகங்களின்
கூச்சல்

அந்தி தொடங்கும் வேளையில்
'பளிச்'சென்று பஜார்
மங்கலாக அப்பா
வயிறு நிறைந்திருந்தது
தொந்தியில் சந்தனம்
என்னை காணாதது போல் கண்டார்
'ஏழை ஏதலன் கீழ்மகன்'
மன்னிக்க வேண்டும் என
மர்மங்களை தூவிவிட்டு
நகர்ந்தார் ●

*பரகாலனின் 'பெரிய திருமொழி'

**"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>**

# அரூபவலை

பொ. கருணாகரமூர்த்தி
ஓவியம்: குமார் பட்நாயக்

அது 80களின் ஆரம்பம். கி-ஜெர்மனி நோக்கிப் பறந்த AEROFLOT/LOT போலந்தின் விமானங்கள் அனைத்தையும் நிறைத்துக்கொண்டு தமிழர்கள் அம்முலோதியாக வந்து இறங்கிக் கொண்டிருந்த சமயம். அவர்களைவிடவும் ஒரு வருடம் முன்னதாக பெர்லினில் கால்களைப் பதித்துவிட்ட நானும் ராஜாவும், அரசு தந்த பென்ஷியோன்களின் (விடுதிகள்) கட்டில்களைத் தேய்த்துக் கொண்டிருக்கையில், எங்கள் பென்ஷியோனுக்கு இணுவிலிலிருந்து பாரிவேந்தன் என்றொருவரும் வந்து சேர்ந்தார். அவரிடம் வம்புதும்பு பிக்கல் பிடுங்கல்கள் எதுவுமில்லை. பியர்கூட மாந்தமாட்டார். கொஞ்சம் சனாதனி, ஆசாரசீலர். அவருக்கு ஜெர்மனிக்குப் புறப்பட முதலே ஊரில் திருமணம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. அவர் இங்கு வந்திறங்கிய பின்னால் பாதைகளின் நேச்சர், துல்லியம், தெளிவு, காலதேச வர்த்தமானங்களை அவதானித்து அதே தடத்தில் மனைவியையும் அழைப்பதாக இருந்தது.



பெம்மான் இணுவில் பரராசசேகரப் பிள்ளையார் கோவிலின் சுற்றுவட்டகையில் வாழ்ந்ததனாலாக்கும், மூச்சாவுக்குப் போவதொன்றைத் தவிர்த்து எடுக்கும் ஒவ்வொரு காரியத்துக்கும் நேரம், காலம், திக்கு, ஓரை, சூலம், பக்ஷி பார்த்துக் கொண்டிருந்தார்.

‘வாரும் இன்றைக்குப் போய் வதிவு அனுமதியைப் புதுப்பித்துக்கொண்டு வரலாம்’ என்றால் ‘இன்றைக்குப் படுபக்ஷி போகிற காரியம் உருப்படாது, அதுக்குள்ள 13ஆம் தேதிவேற, மூன்றும் ஒன்றும் நாலு. அது, சனி இலக்கத்தின்ரை பாதி, என்ன செய்யும் தெரியுமோ’ என்று மிரட்டுவார். அல்லது நீர் மேஷராசிக்காரன் உமக்கு இன்றைக்கு வடக்கில கண்டம் ஆபத்து, மேற்கில தண்டம் அதாவது அபராதம் வரும் என்று அனைவருக்கும் சாம்பிராணி போட்டுக் கொண்டிருப்பார். ராஜா எனும் உடனுறைபவன் கடுப்பாகி, “எனக்குக் இன்றைக்குக் கொன்டெம் வாங்கப் போகவேணும். எந்தத் திக்கிலபோனால் விக்கினமில்லாமல் கிடைக்கும் சொல்லும்” என்றான்.

“நான் பலனைச் சொன்னன் காணும், கேட்கிறதும் விடிறதும் உம்மிஷ்டம்” என்பார். இரண்டு நாட்கள் செல்லக் கேட்டோம்.

‘வாருமன் ஒரு சீனா றெஸ்ரோறண்டில கிச்சின் ஹெல்ப்பர் வேல இருக்காம், போய்க் கேட்டுப் பார்ப்பம்.”

‘அது எந்தத் திக்கில கிடக்கு ஐஸே.’

யாருக்குத் தெரியும். சுரங்கத் தொடரியில் ஏறியமர்ந்துவிட்டால் அவருட்பட எவருக்கும் திக்குத்திசைகள் தெரியாது. நம்மிடம் அப்போது என்ன ஜிபிஎஸ்ஸுடனான எடுப்புத் தொலைபேசிகளா இருந்தன? சும்மா, ‘கொஞ்சம் வடமேற்காய் வரும்’ என்றால், ‘சாய்க், இன்று கடகத்துக்கு மேற்கே சூலம். ஓரை நல்லாயில்லை, நாளையின்றைக்கு மதியத்துக்கு முன்ன கிளம்பினால் ஜெயம் நிஜம்’ என்பார். அதாவது பரிதியை எதிர்த்துப் போகிற காரியம் சிதறுமாம். நாளையின்றைக்குப் போய்ப் பார்த்தால் அவன் அவ்வுணவகத்தை அதற்கு முதமாதமே விற்றுவிட்டுச் ஹொங்காங் போயிருக்க, அவ்விடத்தில் ஒரு பாலியல்கூடம் முகாமிட்டிருக்கும்.

நாங்களோ வேலை வேலை என்றலைய, பார்வேந்தனோ அழகிய இளமனைவியைப் பிரிந்து வந்த தாபத்திலும் பசலையிலும் தோய்ந்திருந்தார், ஆதலால், அப்பஞ் சாங்கத்தைக் காய்வெட்டிவிட்டு எண்திசைலும் பயணித்து வேலை தேடலானோம். அவ்வப்போ பண்ணைகளில் அமயமாகக் கோழிகளுக்குத் தீவனம் போடுதல், ஆப்பிள் பிடுங்குதல் போன்ற சில்லறை ஊழியங்கள் கிடைத்துவிடுவதுமுண்டு.

அப்போது பெர்லின் நகரில் எல்லாவிடத்தும் மூலைக்கு மூலை ’பீப் ஷோக்கள்’ எனப்படும் நிர்வாண நடனக்கூடங்கள் இருந்தன. சுழன்றுகொண்டிருக்கும் ஒரு வட்டவடிவ மேடையில் அழகான உலல்வாகுள்ள ஒரு இளம் பெண் மிதமான வெளிச்சத்தில் வந்துநின்று தன்னிடமுள்ள அனைத்தையும் துலக்கி இரசிகர்களுக்குக் காட்டும்வகையில் உடலை வளைத்து - முறுக்கி, குவித்து - விரித்து ஆடிக்கொண்டிருப்பாள். அவளைச் சுற்றி 16 திக்குகளிலுமுள்ள ஜன்னலின் மாடங்களில் ஒரு மார்க் நாணயத்தை நுழைத்ததும் அதன் கண்ணாடிக்கதவு மெதுவாக ஒரு நிமிடம்வரை திறந்திருக்கும். கதவு மூடுவதற்கு முன் சமிக்கையாக ஒரு நீல ஒளி கதவில் வரும். உங்களுக்குத் தொடர்ந்து நடனத்தைப் பார்க்க வேண்டுமாயின் நீங்கள் தொடர்ந்தும் மார்க் நாணயங்களை நுழைக்க வேண்டியதுதான். (நடன தாரகைகளைப் பார்த்தபடியே சுயமைதுனம் செய்வோருக்கு டிஸு வசதிகள் உண்டு) இக்கூடங்களை நாம் சங்கேதமாய் ‘அம்மன்தரிசனம்’ என்போம். மாதத்தில் 4 தரமாவது ’அம்மன்தரிசனம்’ செய்யாத இளைஞர்கள் இல்லை. பாரிவேந்தன் மட்டும், ‘வேண்டாம் பெடியள், அம்மாதிரியான ஆட்டங்கள் உங்க மனத்தைக் கெடுத்துப்பாதையை மாத்திவிடும். தமிழ் இளைஞர்கள்



உள்ளும் புறமும் சுத்தபத்தமாய் இருக்கவேணும்' என்பார், எங்களுக்கு வாய்த்த அக்கட்டணமின்றிய கம்பவாரிதி.

ஆனால், ராஜா பாரிவேந்தன் தன்னிடம் முழுநீலப் படங்கள் ஓடும் தியேட்டர் பற்றித் தனிமையில் விசாரித்ததாகச் சொன்னான். அப்படியான போர்னோ படங்கள் ஓடும் தியேட்டர்கள் 3 பேர்தான் இருந்தாலும் தொடர்ந்து அவர்களிடமுள்ள படங்கள் அனைத்தும் தீரும்வரையில் ஓட்டிக் கொண்டிருப்பார்கள். ஒருமுறை கட்டணம் செலுத்தினால் போதும். சுவைஞன் எத்தனை மணிநேரம் வேண்டுமானாலும் அங்கே குந்தியிருக்கலாம். பாரிவேந்தன் அதைப் பார்க்கப்போனாரோ இல்லையோ எனக்கதில் அக்கறையில்லை. அதது அவரவர் அந்தரங்கம், இரசனை, துய்ப்பு சம்பந்தப்பட்ட சாங்கியங்கள்.

நாளடைவில் பாரிவேந்தன் என்னோடு நெருங்கிய தோஷ்தாகிவிட்டிருந்தார். ஆகையால், எனக்கு மட்டும் ஒருநாள் இரகசியமாக அவரின் மனைவியின் படத்தைக் காண்பித்துவிட்டு என் காதுக்குள்ளே 'பெயர் ஷியாமளா' என்றார். பெண் மாநிறத்திலொரு சீமை முயலைப்போல, ஆனால் நிஜமாகவே நெடிய சியாமளத்துடன் ஒயிலாகத்தான் இருந்தாள். 'அண்ணே அண்ணியின் பெயரையும் பொலிவையும் 'அப்பியரன்ஸையும்' பார்க்க ஐயர் ஆத்துப் பெண் மாதிரி இருக்காக. எப்பிடிண்ணே உங்கிட்டச் சிக்கிச்சு' என்றேன்.

'சாய்ச்சாய், ஐயர் ஒன்றுங்கிடையாது. எல்லாம் நம்ம ஆட்கள்தான், சைவப்பெண்' என்றார் வெட்கத்துடன். சைவம் என்பதும் யாழ் ஜாதிய மரபில் ஒரு பிரிவு, அதற்குள் கௌலசைவம், வீரசைவம் என்று உட்பி ரிவுகள் எல்லாம் உண்டு, (அவ்வலசல் இக்கதைக்குள் வேண்டாமே.)

'அப்போ அவா பக்கத்து வீடு ஐயரதோ' என்றேன். அங்கதசூத்திரம், குத்தல் பிடிபடாமல் முழித்தார். 'இல்லேண்ணே எடுத்ததுக்கெல்லாம் திக்கு, காலம், சூலம், ஓரை, பக்ஷி பார்க்கிறியளே அதனால் கேட்டேன்' என்று சடைஞ்சேன்.

பாரிவேந்தன் இரண்டொரு மாதத்துள் ஏதேதோ மாயங்கள் பண்ணித் தன்னை அனுப்பிய பயண முகவர் மூலமே வரப்போகின்றவொரு தம்பதியுடன் ஷியாமளாவும் சேர்ந்து வருகிற மாதிரி ஒழுங்குகள் பண்ணிவிட்டிருந்தார். பொண்ணு அவர் விரும்பிய மாதிரி ஒரு ஆவணியிலேயே வந்திறங்கினாள்.

நான் தூங்குகிறேன் என நினைத்து பாரிவேந்தன் ராஜாவுடன் அவள் வருகை பற்றி சம்பாதித்தது ஸ்படிகமாக என்காதுகளிலும் விழுந்தது.

'நல்லகாலம், ஷியாமி ஒருவேளை ஆடியில் வந்திடுவாளோவென்று பயந்துகொண்டிருந்தேன் ராஜா.'

'ஆடியிலதான் வந்திருந்தாத்தான் என்னண்ணே.

ஃப்ளைட்டுகள், மற்றப் பயண ஒழுங்குகள் எல்லாம் ஒருங்கிசைய வேணாமா?' அப்பாவியாக ராஜா கேட்டான்.

"இல்லப்பா, ஆடியில கூடக்கூடாதில்ல.'

'ஏன்ணே. உடம்பின் ஹோமோனல், சென்ஸுவல் ஒப்பரேஷன்ஸ் சிஸ்டத்தின்ர மெயின் ஸ்விட்ச் எல்லாம் உங்களிட்டத்தானே இருக்கு?'

'தியறி சரிதான் ராஜா. ஆனால், மனுஷனோட உணர்ச்சிகளைச் சொல்லேலாதப்பன், ஒருநேரம்போல ஒருநேரமிருக்காது.'

ஆவணி மாதத்தின் முதல் வாரத்தில் முதல் விமானத்தில் ஷியாமளாவும் வந்து சேர்ந்தாள். பொண்ணு வந்தாலும் வந்தாள், இவரோ தாலி கட்டிய பின்னரே இருவரும் சேர்ந்திருப்பது என்பதில் உறுதியாயிருந்தார்.

அப்போது இலங்கையின் தமிழ் வந்தேறிகளுக்கு மாலைகளிலும் வாரவிடுமுறை நாட்களிலும் தமிழ்ப் படங்கள் காணொளியில் காட்டிச் உபரித் தேட்டம் பண்ணிக் கொண்டிருந்த ஒரு கோயம்புத்தூர்க்காரர் எமக்குப் பழக்கமாக இருந்தார். அவரிடம் விடயத்தை எடுத்துச்சொல்லி உங்கள் வீட்டில் ஷியாமளாவை ஒரு வாரம் பத்து நாட்கள் தங்கவைக்க முடியுமா என்று கேட்கவும் அவரும் பெருமனது பண்ணிச் சம்மதித்தார். ஷியாமளா அவள் பயணப்பொதி, பெட்டியுடன் அங்கே அனுப்பப்பட்டாள். மாலைகளில் பாரிவேந்தன் தினமும் அவர்கள் வீட்டுக்குப்போய் ஷியாமியைக் கொஞ்சிவிட்டு வருவார்.

அதே வாரத்தில் ஷியாமளாவுக்கு அலைச்சலில்லாமல் சுளுவாக வதிவிட அனுமதி எல்லாம் கிடைத்தது, ஆவணி முடிய முதல் தாலிகட்டவேணுமென்று பாரிவேந்தன் தன் திருமணத்துக்கான நாளெல்லாம் கணித்துவிட்டார். ஆனால், அதைக்கட்டி ஒப்பேற்ற ஒரு பொருத்தமான இடத்தைத்தான் எம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை. உயர்தர ஹொட்டல்களில் அரங்கம் எடுத்து நடத்த எமது பொருளாதாரம் இடங்கொடுக்காது என்பது இரகசியமல்ல.

பொதுவாக அபரிமிதமான ஆடம்பரத் திருமணங்கள் எனக்கு எப்போதும் ஒவ்வாமை தருபவை. புகலிட நாடுகளில் ஐந்தாறு Lumousine வகையிலான மகிழுந்துகளிலிருந்து உலங்கு வானூர்திகள் வரை வாடகைக்கு அமர்த்தியெல்லாம் இப்போது திருமணங்கள் சில நடந்தேறுவதை அறிந்திருப்போம். அப்படியொரு திருமணத்துக்கு என்னை யாரும் தப்பித்தவறி அழைத்தாலுங்கூடப் போகாமாட்டேன்.

கடைசியாக குர்திஷ்க்காரர் (இஸ்லாமியர்) ஒருவரின் கோடவுனின் சிற்றுந்தில் விநியோக வேலைகள் செய்யும் ஒரு தமிழரின் தயவால் அவரது கோடவுனின் பழவகைகள் சேமிக்கும் பகுதியை 'சுபகாரியம் கோடி புண்ணியம்' என்று ஒருநாள் பயன்படுத்த அனுமதித்தார். அத்துடன் அக்கோடவுனின் களஞ்சியப் பொறுப்பாளர் ஓய்வெடுக்கும் (ஒரேயொரு கட்டிலுடைய) ஒரு அறையையும் பயன்படுத்த அனுமதித்தார். இப்போ திருமண மண்டபம் தயார், சீர்திருத்த முறையிலான கல்யாணத்துக்கெல்லாம் பரமவைதீகன் பாரிவேந்தன் தயாரில்லை. ஐயர் வந்தேயாகணுமென்று பிடிவாதமாயிருந்தார். பெர்லினில் முன்பு எங்களது சமறியில் ஒரு ஐயர் இளைஞர் இருந்தார். என்ன ஒரு முட்டைவறுவலோ அடையோ இல்லாமல் பெம்மானுக்குச் சாதம் தொண்டையால இறங்காது. அவரை இரண்டு மாதங்களுக்கு முன்னர்தான் பிறேமனுக்கு மாற்றிவிட்டிருந்தார்கள், பியரோடான மாலைப்பொழுதொன்றில் ஐயர் பேச்சோடு பேச்சாக என்னிடம், 'எனக்கு விவாஹ மந்திரங்கள் எல்லாம் தெரியும்.

ஓம் சுக்கிலாம் பரதரம் விஷ்ணும் சஸிவர்ணம்

சதுர்புஜம் பிரஸன்ன வதனம் தியாயேத்

சர்வ விக்னோப சாந்தயே

மூஷிக வாகன மோதக கஸ்த்த

வாமன ரூப மகேஸ்வர புத்தர

விக்ன விநாயக பாத நமஸ்த்தே

என்று விநாயகர் சங்கடஹர மந்திரம் சொல்லி ஆரம்பிப்பேன். அடுத்து தெரிந்த விவாஹ மந்திரங்களைச் சொல்வேன். அனைத்துந் தீர்ந்திடிச்சா. சங்கீதத்தில துக்கடாக்கள் மாதிரித் துணுக்குத்துணுக்கா சம்ஸ்கிருதத்தில் நிறைய ஸ்லோகங்கள் இருக்கு, அதில் சிலவற்றை முணுமுணுத்தபடி நீளமாய் மணியை ஆட்டிக்கொண்டு, இந்த சொம்பை அதில வைச்சு, குத்துவிளக்கில எண்ணெய்யை நிதானமாவிட்டு, அந்த அரிசியை இந்தத் தட்டில மாற்றிக்கொட்டி, இந்தப் பூக்களை அந்தப் பெட்டிக்குள் வைத்து நேரத்தை ஓட்டுவேன். அதெல்லாம் இருக்கிறவாளுக்கு ஏதோ சடங்கு மாதிரித் தெரியும். நேரம் இன்னும் இருந்திச்சா. நடுவில் எல்லாத்தும் கலந்துகட்டக்கூயமாதிரி 'கஜானனம் பூத கணாதி ஸேவிதம்' என்று விநாயக சதுர்த்திச் ஸ்லோகங்கள் இருக்கு, அதுகளை இட்டுநிரவி ஒப்பேற்றிவிடுவன் சிம்பிள் வேலை காணும். புண்யகாரியம் ஒரு கடவுளும் கோவிச்சுக்கா யினம்' என்றது ஞாபகத்துக்கு வரவும் பிறேமனிலுள்ள இந்து மகேஷ் என்கிற இலக்கிய நண்பர் ஒருவர் மூலம் அவரைத் தொடர்புகொண்டு ஐயரை, 'பெர்லினுக்கு வந்து இத்திருமணத்தை நடத்தித்தர முடியுமா' என்று கேட்டேன். உடனே சம்மதித்தார். தானே பூக்களை வாங்கி, வேண்டிய மாலைகளைக் கட்டிக்கொண்டு வருவதாகவும், ஆனால், 'எனக்கு அடுத்தநாள் விஸா றி-நியூவல் இருக்கு ஐஸே, அன்றைக்கு இரவே என்னை றெயின் ஏற்றிவிட்டிட வேணும் கண்டீரோ' என்றார் நிபந்தனையாக.

கலைத்திறனுள்ள இளைஞர்கள் நாம் வாங்கிக்கொடுத்த, கிறேப் பேப்பர்கள், காகித அட்டைகள், ஃபோர்ம் றப்பர், தெர்மோகோல், டெகறேசன்சீட்கள் ஜிகினாக்கள், பலூன்களையும் வைத்து அழகான மணவறையும் செய்து, மண்டபத்தின் உத்தரத்தையும் அலங்கரித்துவிட்டிருந்தார்கள். ஒளி அலங்காரத்தையும் ஒரு நண்பர் தன்னார்வத்துடன் முன்வந்து பொறுப்பேற்றார். 50 கதிரைகளை வாடகைக்கு எடுத்துவிட்டிருந்தோம். திருமணம் முடிய இந்திய உணவகம் ஒன்றில் எளிமையான விருந்துக்கும் ஒழுங்கு பண்ணியிருந்தோம்.



மாலை ஏழேகாலுக்குத்தான் சுபநேரம். ஹொட்டலிலும் விட்டத்தைப் பார்த்துக்கொண்டு படுப்பதைத் தவிரச் செய்வதற்கு எதுவுமில்லை. எல்லோரும் மண்டபத்துக்கு மூன்று மணிக்கே போயிருந்தோம். கோயம்புத்தூரார் மனைவி பாரிஜாதம் மாமி கட்டணமின்றி 100 வடைகளும் 100 ரோல்ஸும் பண்ணித்தந்தார். நாம் போனதிலிருந்து உணவகமொன்றில் பணியாற்றும் தோழர் ஒருவர் கொண்டுவந்த பெரிய வாட்டர் குக்கரில் தண்ணீரைச் சூடாக்கிச்சூடாக்கி எமக்குக் கோப்பியும் தேநீருமாகத் தந்துகொண்டிருந்தார்.

கோடவுனின் களஞ்சியக் காப்பாளருக்கான அறையின் திறப்பு என்னிடந்தான் இருந்தது. நாலுமணிக்கு மேல் என்னிடம் வந்த பாரிவேந்தன், "அந்த அறைத்திறப்பை ஒருக்காத்தா, ஷியாமிக்கு முதுகு உளையுதாம் கொஞ்சம் தேகத்தைச் சாய்க்கப் போறாளாம்" என்றவர் "அப்படியே சாய்த்திட்டுப் பிறகு மணவறைப் புடவையையும் உடுத்தட்டன்" என்ற விகுதியையும் அவரே சேர்த்தார். எனக்கென்ன கெட்டது. நான் விகற்பமில்லாமல் திறப்பைத் தூக்கிக்கொடுத்தேன்.

ஷியாமியின் பின்னால் ஓடிய பாரிவேந்தன் தானும் அதற்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டார். ஒரு மணிநேரம் அவர்கள் வெளியே வரவில்லை. ஆறு மணியாகியது. அவர்களை அப்போது எமக்கு அரங்கில் தேவையுமில்லை.

மாதேஷும் நாங்களுமாக விசா அலுவலகத்தில் கண்டவர், சோஷியல் அலுவலகத்தில் சந்திச்சவர், சுரங்கத் தொடரியில் பார்த்தவர் என்று எல்லோருக்கும் சொல்லி 50 பேரை வரவழைத்திருந்தோம்.

விருந்தினர் ஒவ்வொருவராக வர ஆரம்பித்துவிட்டனர். எமக்குப்போய் அவர்கள் கதவைத் தட்டுவதும் இங்கிதமாகப்படவில்லை. ஆறே காலாகிவிட்டிருந்தது, நானேபோய் அவர்களை வெளியே கூப்பிடுவோமோ என்றிருக்க ஒருவாறாக ஒரு பாரவுந்துக்குத் தனியாக வாழைப் பழப்பெட்டி லோடு ஏற்றியவர் மாதிரி பாரிவேந்தன் வியர்த்துக்களைத்து வெளியே வந்தார். வந்தவர் நேராகவந்து என் காதைக்கடித்தார்.

'ஷியாமளாவுக்குக் குளிக்க வேணுமாம் என்ன செய்யிறது?'

நான் அசட்டுத்தனமாக யோசித்து, "ஏண்ணே அவர் ஏதும் வீட்டுக்கு விலக்காகிட்டாரா" என்றேன்.

'ச்சே, அப்படி எல்லாம் இல்லப்பா. இது வேறமாதிரி' என்றுவிட்டுப் பாரிவேந்தன் நாக்கைக் கடித்தார்.

நான் அசட்டு விழிவிழிக்க என் கன்னத்தைத்தட்டி, ‘எங்க விரதத்தை முறித்துக் காமனே வென்றிட்டான் ஐஸே” என்றார் முகத்தில் நாணமும் சங்கடமுமாய்.

அவர் கோடிகாட்டும் விஷயம் பிடிபட்டாலும், என் அசட்டு முகத்தை அப்படியே மாற்றாமல் வைத்துக்கொண்டு, ‘ஏண்ணே, வெளிக்கிடக்குள்ளதானே அந்தக் குளிப்புக் குளிச்சியள். இப்போ இதுக்குள்ள இரண்டாவது ஜலக்கிரீடை என்றால் ஆச்சாரத்துக்கும் (மனதுக்குள் - ஆச்சாரமசிருக்கும்) ஒரு லிமிட்டிருக்கோணும். இப்போ ஐயர்வாற நேரமாச்சு, மனுஷன் வந்து குதிக்கப்போகுது’ என்று குரலை உயர்த்தினேன்.

‘நீர் சின்னப்பொடியன் ஐஸே, உமக்குப் பக்குவம் போதாது. இதெல்லாம் விளங்க. கண்டிப்பாய் ஷியாமளாவும் நானும் இன்னுமொருக்கால் குளித்தேயாகணும்பா. அதுக்கொரு வழிசொல்லும்’ என்று அழுத்திச் சொன்னவர் என்னைப் பார்த்துக் கண்ணடித்தார்.

இத்தனைக்கும் எனக்கு 19, அவருக்கு 30. மௌனம் சங்கட சமயோசிதம், மௌனித்தேன்.

அங்கிருந்த குளியலறையில் வெந்நீராக்கும் கருவிவேறு இயங்கவில்லை. அதை முதலிலேயே சொல்லியிருந்தார்கள். அவர்களில் ‘வந்த காமன்’ எங்களையும் சேர்த்துப் படுத்தினான். கோடையானாலும் பச்சைத் தண்ணீரைத் திறந்துவிட்டு நேரடியாகக் குளிக்க முடியாது. தண்ணீர் ‘சில்’லென்றிருக்கும். நானும் ராஜாவுமாக கோடவுணின் கோடிப்புறத்தில் காஸ் அடுப்பைவைத்து ஒரு அகன்ற அலுமினியப் பாத்திரத்திலும், இதுவரை காப்பி வைத்துக்கொண்டிருந்த வாட்டர் குக்கரிலுமாக தண்ணீரைச் சூடாக்கிச் சூடாக்கிக் கலந்து இருவரையும் இரகசியமாகக் குளிக்க வைத்தோம். மெல்ல மெல்ல இப்போது கணிசமான ஆட்களும் வந்து சேர்ந்துவிட்டார்கள். ஐயரும் மாலைகளுடனும் சொம்புக்குடங்களுடனும் ஒருசீருந்தில் வந்துபந்தாவாக இறங்கினார். பின் ஜாம் ஜாமென்று பாரிவேந்தன் - ஷியாமளா மாங்கல்யதாரணம் நிறைவேறியது.

இரண்டு நாட்கள் கழித்துத் தம்பதியை சோஷியல் அலுவலரிடம் அழைத்துச்சென்று, அவர்கள் இருவருக்கும் தமிழர் மரபுமுறைப்படி திருமணமாகிவிட்ட விஷயத்தை எடுத்துச்சொல்லி, படங்களை எல்லாம் காட்டி, இருவரும் சேர்ந்து இருக்கும்படியாக ஒரு விடுதியோ அறையோ தருமாறு விண்ணப்பித்தோம். எம் கோரிக்கையைப் பரிசீலித்த அப்பெண்மணி, ‘கல்யாணத்தன்று ஷியாமளா உடுத்தியிருந்த பட்டுச் சேலையிலேயே வந்திருக்கலாமே அவர்களோடு சேர்ந்து நானும் சேர்ந்து ஒரு படம் எடுத்திருப்பேன்’ என்று ஜோக்கடித்துவிட்டு, அவர்களுக்கு அலுவலக ஜாடியிலிருந்த பூங்கொத்தையும் தூக்கிக்கொடுத்து வாழ்த்தைக்கூறிவிட்டு, அன்றைக்கே நாம் இருந்த பென்ஷியோனிலேயே இருவருக்கும் ஒரு தனியறையை வழங்கினார்.

அதற்கான இலிகிதங்களை அவர் தயார் செய்யும்வரை வெளியில் காத்திருந்தோம். எனது உதவிகளுக்காக பாரிவேந்தன் நன்றிசொல்லி நெகிழ்ந்துபோயிருந்த அத்தருணத்தில், ஷியாமளா வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கையில், இவர் குனிந்து தரையைப் பார்த்தபடி சொன்னார்: “கலியாணத்தன்றைக்கு இரண்டாவது குளிப்பு எதற்கு என்று குழம்பினீரில்லையா அதை விளக்கும்படியான சிஷுவேசன் அப்ப இருக்கேல்லைக்கிளி” என்றவர் நிறுத்தி, ஷியமளா அருகில் இல்லை என்பதை உறுதிப்படுத்திக்கொண்டு, “அந்த அறைக்குள்ள யிருந்த நேரத்தில நாம காமனிடம் தோற்றுப் போ யிட்டோம் கிளி. ஆக்கப்பொறுத்த எமக்குக் கடைசியில ஆறப்பொறுக்க முடியல’ என்றார்.

நான் மூணாம் வகுப்புச் சிறுவனைப்போலவும் அதைப் புரியாதவொரு பாவனையோடும் இருக்க முயற்சித்தேன்.

ஆறேழு ஆண்டுகள் கழித்து ஒருநாள் அவர்கள் வீட்டில் தனி மென்னிருக்கையொன்றில் நானும் மேடாவொன்றில் அவரும் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கையில், எம்மிருவரின் கால்களுக்கிடையால் காற்பந்தை உருட்டிக்கொண்டுவந்த அவர் பையன், அதை வாசலில் வைத்துத் தோட்டத்தில்போய் விழும்படி பலமாக எம்பி உதைத்தான்.

பாரிவேந்தனுக்கு அவன் அப்போதே ஒரு ‘மரடோனா’வாக மாறிவிட்டதாக மனதுக்குள் புளகாங்கிதம்.

‘அன்று நாம் காமனிடம் தோற்றதின் ரிசல்ட்ஸ்தான் இவன்’ என்றவர் கண்களைக் கீழே வீசிப் அவனைப் பெருமையுடன் காட்டினார்.

‘ஐஸீ’ என்றேன் அசுவாரஸியமாய், தொடர்ந்து, ‘சும்மா சுனாமி மாதிரியல்லோ ஷியாமி பாய்ந்தென்னை மேவினா. விடுபடமுடியாத மதுரலாகிரிப்பா அது’ என்றவருக்கு, ‘அதெல்லாம் எம்மோட அந்தரங்கம், அனாவசியமாய் எதுக்கு இந்தப்பயலோட’ என்ற நினைப்பு வரவும், திடுப்பென்று அவ்விடத்தில் சம்பாஷணையைக் குறுக்கி வெட்டினார்.

அவரே, ‘அதெல்லாம் உமக்கு எதுக்கு. நீர் சின்னப் பெடியன்’ என்றிருந்தாலும் ஆச்சரியப்பட்டிருக்கமாட்டேன்.

அவ்வேளை அவர்கள் சமையலறையூடாகநுழைந்த காற்று, சுழன்றுவந்து எம் மன்றத்தில், அங்கே ஷியாமளா தோசைசுடும் செய்தியைத் தூது கொணர்ந்தது,

பாரிவேந்தன் எழுந்து தன் ஷேர்ட்டைக் கழற்றி அருகிலிருந்த கதிரையின் சாய்வின்மேல் போட்டுவிட்டு, ‘ஊர்ல மாதிரியே இங்கயும் வெய்யில் சும்மா அனத்துது, என்ன ஐஸே’ என்றார்.

நாங்கள் அதன்பிறகு இந்திய அமைதிப் படையின் இலங்கைப் பிரசன்னம் பற்றிக் கதைத்தோம். ●

**பொ. கருணாகரமூர்த்தி <karunah08@gmail.com>**

# சங்கீத வியாபாரம்

ஆர்.கே. நாராயண்
தமிழ்: மணி வேலுப்பிள்ளை

இன்றைய இசையுலகின் நிலையைப் பற்றி உரத்துப் பேசியபடியே நாங்கள் அந்த இசை மண்டபத்தை விட்டு வெளியே வந்தோம். ஏற்கெனவே அன்றைய தினம் எங்கள் வாயாடியை நாசூக்காக அப்புறப்படுத்தி விட்டோம் என்ற நினைப்பில் நடந்து கொண்டிருந்த எங்களிடம் அந்த வாயாடியே வந்து வாயைத் திறந்தான்: "வியாபாரமயமா? இப்போ எல்லாம் சங்கீதம் அவ்வளவு தூரம் வியாபாரமயமாகி விட்டதென்றா நினைக்கிறீர்கள்? என்னுடைய அனபவத்தைக் கேளுங்கள். உங்களுக்கு ஏற்பட்ட படுமோசமான அனுபவம்கூட என்னுடைய அனுபவத்துக்கு ஈடாகுமென்று நான் நினைக்கவில்லை" என்ற பீடிகையுடன் அவன் சொன்ன கதை இதுதான்:



சரவண பாகவதர் ஒரு பெரிய இசைக் கலைஞர். ஒரு தடவை எனக்கு அவருடைய தொடர்பு ஏற்பட்டது. மேதை என்றால் அவர்தான். நீங்கள் எத்தனை பேர் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களோ எனக்குத் தெரியாது. கும்பிடத்தகுந்த மனிதர். குரல் வளம் மிகுந்தவர். தனது மூதாதையருடைய காணியில்தான் அவர் குடியிருந்தார். நீண்ட சங்கீதப் பரம்பரையில் பிறந்தவர். தனித்திருந்து பாடுவதைவிட வேறெதுவும் தனது வாழ்க்கைக்குத் தேவைப்படும் என்று அவர் என்றுமே நினைத்ததில்லை. விளம்பரம் இல்லை. வங்கிக் கணக்கேடுகள் இல்லை. ஆட்கள் முண்டியடிக்கும் இசைக் கச்சேரிகள் இல்லை. பொது மக்கள் பற்றிய நினைப்பு இல்லை. போதும் என்ற மனம். தனித்திருந்து தம்புராவை அணைப்பதில் ஒரு தனி இன்பம்.

அப்படிப்பட்ட ஆளை வெளியூர் எங்காவது கொண்டுபோய்ப் பாடுவிப்பது வெகு சிரமம். எவராவது அவர் பாடுவதைக் கேட்க விரும்பினால் அவருடைய வீட்டுக்குப் போய் விருந்தாளியாக இருக்க வேண்டியதுதான். சீமான் எப்போ பாடத் துவங்குவார், துவங்கினால் எப்போ நிறுத்துவார் என்பது தெரியாது. சனம் வளவெல்லாம் வட்டமிடும். வித்துவான் தம்புராவை எட்டி எடுப்பதைக் கண்டதுதான் தாமதம், சனம் எல்லாம் அவரைச் சுற்றிச் சூழ்ந்துவிடும். சில வேளை ஒரே இராகத்தை ஆலாபரணம் பண்ணி ஒரு கிழமை முழுவதும் பாடுவார். சாப்பாட்டுக்கும் நித்திரைக்கும் மாத்திரம்தான் சற்று இடைநிறுத்துவார்.

அப்படிப்பட்ட மனிதரை அப்படியே இருக்க விட்டுவிட வேண்டும். ஆனால், வீண் பெருமை பிடித்தவர்கள் அதற்குச் சம்மதிக்க மாட்டார்கள். அப்படிப்பட்டவரை அவருடைய உறைவிடத்திலிருந்து கிளப்பி வந்து கெடுப்பதில் அவர்களுக்கொரு தனி இன்பம். எனது சிநேகிதன் பால்ராமும் அந்த மாதிரியான ஓர் ஆள்தான். அவன் ஒரு பிரபலமான தொழிலதிபர். வணிகக்கூடத் தலைவன். இன்னும் பற்பல பதவிகள். பொதுவாக அவன் பகட்டு வாழ்க்கைதான் நடத்தி வந்தான். அதோடு சேர்த்து அவன் மகளுடைய கலியாணமும் வந்து சேர்ந்தது. வெளியூர்த் தொழிலதிபர் ஒருவரின் மகன்தான் மாப்பிள்ளை. கலியாணம் ஒரு மாதத்தில் நடக்க இருந்தது. பால்ராம் ஏதாவது சிறப்பாகச் செய்து, ஏன் எல்லாவற்றையுமே சிறப்பாகச் செய்து கலியாணத்தைச் சிறப்பிக்க விரும்பினான். பகட்டுடை தரித்த மேள தாளகாரர்கள். உபசரிப்பின்போது தம்பதிகள் அமர்வதற்கு மல்லிகை மலரிழை, மினுங்கும் மணியிழை இலங்கும் மஞ்ச விமானம். அதனைச் சுற்றி விமானிகள் போல் உடுத்துப் படுத்து நிற்கும் பணிவிடையாளர்கள். போதாக் குறைக்கு உபசரிப்பின்போது சரவண பாகவதரைக் கொண்டு வந்து பாடுவிக்கும் யோசனையும் அவனுக்குப் பிறந்தது. அவருடைய சங்கீதத்தின் மீது அவனுக்கிருந்த காதலினால் அந்த யோசனை உதிக்கவில்லை. வேறெவரும் வித்துவானை வெளியே கிளப்புவதில் வெற்றி காணவில்லை என்று அவன் கேள்விப்பட்டிருந்தான். அதனால்தான் அவன் அவரை ஏற்படுத்த விரும்பினான். எனக்குப் பெரியவருடன் மிகுந்த சிநேகிதம் இருப்பது அவனுக்குத்

தெரியும். அதனால், அவரை எப்படியாவது ஒழுங்குசெய்து தரும்படி என்னிடம் ஒரே அடியாகச் சொல்லிவிட்டான்: 'சரோஜாவின் கலியாண வீட்டில் வேறெவருமல்ல, சரவண பாகவதர் பாட வேண்டும் என்பதுதான் எனது ஆசை. சரோஜா அதனை வாழ்நாள் முழுவதும் நினைத்துப் பெருமைப்படுவாள். அவள் விரும்பினால், அவளுக்குச் சங்கீதம் சொல்லிக் கொடுக்க அவரை ஏற்படுத்தவும் நான் தயார். அவர் வாசிக்கும் வாத்தியத்தையும் நானே வாங்கித் தருகிறேன். அது என்ன வாத்தியம்' என்று கேட்டான்.

'அவர் வாத்தியம் வாசிப்பவரல்ல, பாட்டுப் பாடுபவர்' என்று சொன்னேன்.

'ஓ' என்று இலேசாகவும் சற்று ஏமாற்றத்துடனும் சொல்லிவிட்டு, 'போகட்டும், அவர் சரோஜாவுக்குப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கட்டும்' என்றான். சற்று யோசித்துவிட்டு 'சரி, அதெல்லாம் பிறகு. இப்போ என்ன விலை பேசி என்றாலும் அவரைக் கலியாண வீட்டுக்குப் பிடித்துக் கொண்டுவா' என்று என்னைப் பிடித்துக்கொண்டான். பெரியவரைக் கலியாண வீட்டுக்கு வந்து பாடத் தூண்டுவதில் சிரமப்பட நேருமே என்று பயந்த எனக்கு ஓர் அதிர்ஷ்டம் காத்திருந்தது. எதிர்பாராத விதமாக எனது முயற்சி இலகுவில் கைகூடும் வாய்ப்புக் கிட்டியது. நான் அவரைச் சந்தித்தபோது ஓர் ஈடு சம்பந்தமாக வட்டி கண்ட வேண்டிய பிரச்சினையைச் சமாளிப்பதில் அவர் ஈடுபட்டிருந்ததைக் கண்டேன். அவருக்கு அவசரமாக ஆயிரம் ரூபா சொச்சம் தேவைப்பட்டது. பால்ராமின் வீட்டில் பாடுவதற்கு நானூறு ரூபா தரலாம் என்றும், அதன் மூலம் வட்டியில் ஒரு பகுதியைக் கட்டலாம் என்றும் சொன்னவுடன் பெரியவர் பெரிதும் மகிழ்ந்து நிம்மதி அடைந்தார்.

'உபசரிப்பு பி.ப. 6 மணிக்கு. முன்னொரு போதும் பொது மேடையில் பாடாத ஸ்ரீ சரவண பாகவதரின் அரியதோர் இசைக் கச்சேரி' என்று பால்ராமின் அழைப்பு பொன் எழுத்துக்களில் பறைசாற்றியது.

மஞ்ச விமானத்துக்கு எதிரே கண்ணைப் பகட்டும் அரங்கொன்று போடப்பட்டது. பெரியவர் தம்புராவைப் பற்றியபடி அரங்கில் ஏறி அமர்ந்தார். அதை எல்லாம் உவகையுடன் அவதானித்துக் கொண்டிருந்த பால்ராம், 'அவர் வாத்தியம் ஒன்றும் வாசிப்பதில்லை என்று சொன்னாய். இங்கே ஒன்று வாசிக்கிறாரே' என்றான். தம்புரா ஊமை வாத்தியம் என்பதையும், அது இசைக்கும் வாத்தியம் அல்ல என்பதையும் சாடை மாடையாக அவனுக்கு விளங்கப்படுத்தினேன்.

மாடம் நிரம்பி வழிந்தது. பெரியவர் சனத்தைச் சற்றும் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. மெய்மறந்து, கண்களை இறுக மூடி, தனது குரல் பக்க வாத்தியங்களின் ஒலியோடு ஒத்துப்போகிறதா என்பதை அறிவதற்காகக் கிட்டத்தட்ட இருபது நிமிடங்களாக ஒரே தொனியை மீட்டினார். கூரைச் சலாகைகளை ஒட்டிப் பறக்கும் வண்டுகள் ரீங்காரம் செய்வது போல், மூடிய கண்களுடன் இருந்த அவருடைய வாயிலிருந்து அவர் குரல் ஓயாது, ஒழியாது ஒலித்துக் கொண்டிருந்தது. அப்புறம் கண்களைத் திறந்து சுற்றிவரப் பார்த்துவிட்டு, மூன்று சுரங்களில் சா...பா... சா...பாடினார். ஒன்று பாடக்கிட்டத்தட்ட பதினைந்து நிமிடங்கள் பிடித்தன. பால்ராமுக்கோ எல்லாமே ஒன்றுதான். அவன் மேல்நாட்டுப் பாணியில், கம்பளித் துணியில் சீருடை உடுத்திருந்தான். சிறப்பு வாய்ந்த தனது விருந்தினர்களைப் பார்த்து முறுவலிப்பதிலும், அவர்களுடைய கைகளைப் பிடித்துக் குலுக்குவதிலும், அவர்களை மஞ்ச விமானத்தருகே கொண்டுபோய்த் தனது மருமகனுடன் கை குலுக்குவிப்பதிலும் சுறுசுறுப்பாக ஈடுபட்டிருந்தான்.

சரவண பாகவதர் தனது ஆலாபனையை முடித்து, தோடி இராகம் போல் ஓர் இராகத்தில் ஒரு சுரத்தை ஆரம்பித்தபோது கிட்டத்தட்ட ஒன்பது மணி ஆகிவிட்டது. ஒரே ஒரு பாடலை, அன்று மாலை முழுவதும் பாடிய முதலாவது பாடலை, பாடி முடித்தபோது பத்து மணி ஆகிவிட்டது. வித்துவான் மெச்சத்தக்க விதத்தில் பாடினார் என்பதில் ஐமிச்சம் இல்லை. ஆனால், வேறு நோக்கங்களுக்கு மாடம் தேவைப்பட்டது. விருந்து வழங்க ஏற்பாடாகி இருந்தது. சேட்டும், தோளில் சால்லையுமாக வந்த விருந்தினர்கள் பசியோடு காத்திருந்தார்கள். நிகழ்ச்சிக்கு அழைக்கப் பட்டவர்கள் அத்தனை பேரும் விருந்தினர் பட்டியலில் இடம் பெறவில்லை. இருந்தாலும் பாடலை நிறுத்தி, மாடத்திலிருந்து ஆட்களை அப்புறப்படுத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. அத்துடன் தம்பதிகள் ஏதோ ஒரு சமயச் சடங்கும் செய்ய வேண்டியிருந்தது. ஐயர்மார் மனக்கேட்டுடன் அங்குமிங்கும் நின்றார்கள். பாடலில் மெய்மறந்த ஆட்களால் மாடம் நிறைந்திருந்தது. எங்கிருக்கிறோம், ஏதிருக்கிறோம் என்ற நினைப்பே இல்லைப் போலும். சமையல்காரர்கள் பத்துப் பன்னிரண்டு பேரும் பையப் பைய சமையல்கூடத்தை விட்டு வெளியே வந்து, சனத்தை அண்டி, கடுகடுத்த முகத்துடன் சிடுசிடுத்தபடி நின்றார்கள். வீட்டு எசமான் என்னை ஓர் ஓரமாகக் கூப்பிட்டு, 'இந்தப் பாட்டை நிற்பாட்ட வேண்டும் கண்டியோ... விருந்து பிந்தினால் வெளிக்கிட்டுப் போய்விடுவதாக சமையல்காரர்கள் வெருட்டுகிறார்கள். உடனடியாக மாடத்திலிருந்து ஆட்களை அப்புறப்படுத்த வேண்டும்' என்று சொன்னான். நான் சுற்றிவரப் பார்த்தேன். சமையல்காரர்கள் கடுகடுப்பதும் சிடுசிடுப்பதும் அப்பட்டமாகத் தெரிந்தது. விருந்தினர்கள் பட்டினி கிடக்கத் தொடங்குவதும் தெரிந்தது. பெண்களும் பிள்ளைகளும் அரைத் தூக்கத்தில் வாடினார்கள். எசமானும் எடுபிடிகளும் பல்லை இறுக்கிக் கடித்துக்கொண்டு ஓடுப்பட்டுத் திரிந்தார்கள். பாகவதரோ பரவசத்துடன் பாடிக் கொண்டிருந்தார். சனம் மெய்மறந்து ரசித்துக் கொண்டிருந்தது.

படுசாமம் நெருங்கிக் கொண்டிருந்தது. எசமானின் கடுகடுப்பு கூடிவிட்டது. இருந்தாலும் அவன் பரபரப்பை உண்டாக்கத் தயங்கினான். நான் தருணம் பார்த்து, அரங்கின் மேலே தவழ்ந்து போய், பாகவதரின் பின்னால் இருந்து, அவர் மூச்செடுக்க நின்ற போது, 'இப்போ நீங்கள் மங்களம் பாடலாம் என்று நினைக்கிறேன்' என்று குசுகுசுத்தேன். அவரோ



என்னைக் கண்களால் சுட்டெரித்துவிட்டு, ஒரு தடவை தொண்டையைச் செருமிவிட்டு, கல்யாணி இராகத்தில் சற்றுப் பெருத்ததோர் ஆலாபனையை ஆரம்பித்துவிட்டார்.

நான் பீதி அடைந்தேன். அது வித்துவானுக்குப் பிடித்த இராகம். அதை அவர் ஒரு கிழமை முழுவதும் பாடக்கூடும். அதற்கிடையில் சாப்பிட வந்தவர்கள் எல்லோரும் சாகக்கூடும். போதாக் குறைக்கு மாப்பிள்ளையோ ஓர் அசாதாரண இசைப் பிரியர். இசை முடியும்வரை அவர் அசையப் போவதில்லை. மாப்பிள்ளை அப்படிப்பட்டவராக இல்லாவிட்டால், பாகவதரை ஏன் நாயே என்றும் கேட்காமல், ஐயர்மாரைக் கொண்டு மந்திரத்தை உரத்து உச்சரிப்பித்து, பந்தி வைப்பவர்களைக் கொண்டு கிடைத்த இடங்களில் எல்லாம் இலையைப் போடுவித்து, பாட்டை நிற்பாட்டுவது வெகு சுலபம். ஆனால், இந்த விஷயத்தில் வெகு கவனமாக அலுவல் பார்த்து, பாட்டு தன்பாட்டில் நின்றதாகக் காட்ட வேண்டியிருந்தது. பக்கவாத்தியகாரர்களைப் பார்க்கப் பாவமாகஇருந்தது. வயலின்காரர் வலுவிழந்த நிலையில் நரம்புகளை வெறுமனே வருடிக் கொண்டிருந்தார். மத்தளகாரரின் விரல்களிலிருந்து இரத்தம் பீறிடத் தொடங்கியது. அவர்களுடைய தோள்மூட்டுகள் துஞ்சிவிட்டன. முகங்கள் வதங்கிவிட்டன.

நிலைவரம் நம்பிக்கை தருவதாகத் தெரியவில்லை. எசமான் மாப்பிள்ளையின் இருக்கைக்குப் பின்னாலிருந்து (அவரை எழுப்பும் சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறானோ என்று நினைக்கத்தக்க நிலையில் நின்றுகொண்டு) எனக்குச் சாடை காட்டினான். தனது விரல்களினால் ஒன்றும் இரண்டு சுழிகளும் காட்டிக் கையை உயர்த்தினான். எனக்கு விளங்கிவிட்டது. பாகவதர் கல்யாணியில் அரைவாசி பாடி முடித்து, மூச்செடுக்க நின்ற சமயம் பார்த்து, ‘நீங்கள் இப்போ பாட்டை நிற்பாட்டினால், அவன் உங்களுக்கு மேலதிகமாக ஐம்பது ரூபா தருவானாம்‘ என்று குசுகுசுத்தேன். பாகவதர் சற்று இடைநிறுத்தி, என்னைப் பார்த்து முறுவலித்தார். வென்றுவிட்டேன் என்று நினைத்தேன்.

ஆனால்,சீமான் கல்யாணியைத்தொடர்ந்தஇழுத்த கையோடு, சகானாவில் பாடத் தொடங்கிவிட்டார். பக்கவாத்தியகாரர்கள் வித்துவானோடு ஒத்து வாசிப்பதாகப் பாசாங்கு பண்ணுவதையே நிறுத்திவிட்டு, வாத்தியங்களை அரவணைத்தபடி, எங்கெங்கோ பார்த்து வெறித்துக் கொண்டிருந்தார்கள்.

பால்ராம் வெந்நீர் ஊற்றுண்ட நாயைப் போல

**எங்களுக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது. சங்கீதத்தோடு நாங்கள் சருவக்கூடாது. சங்கீத சபைக் காரியதரிசிகள் இந்த அலுவலை எப்படித்தான் சமாளிக்கிறார்களோ! நினைக்கவே ஆச்சரியமாக இருக்கிறது.**

மாடம் எங்கும் ஓடித் தரிந்தான். மருமகனுடைய இசை ஆர்வம் பால்ராமைத் தடுத்திராவிட்டால், அவன் வித்துவானுக்கு வாய்ப்பூட்டுப் போட்டு, அவரை வெளியே தூக்கி எறிந்திருப்பான். இதற்கிடையே பாகவதரின் பின்னாடி குந்தியிருந்த என்னை அவன் தவிப்போடு பார்த்து இன்னொரு சைகை காட்டினான். சகானா முடிய முன்னதாகவே பெரியவரின் கட்டணம் ஐநூறு ரூபாவாக உயர்த்தப்பட்டுவிட்டது. பெரியவர் உதட்டைக் கடித்து முறுவலித்து, என்மீது ஒரு நரிப் பார்வையை வீசினார். அவர் ஒரு கூலிப் பாடகர் என்பது எனக்கு முன்னரே தெரியாது. எவ்வளவு கறக்க முடியுமோ அவ்வளவு கறப்பதற்காக அவர் பாடுபடுவது அப்பட்டமாகவே தெரிந்தது. அவர் இடைவிடாது பாடினார், ஒன்று முடித்த கையோடு இன்னொன்றாக, இடையே குறுக்கிட்டு ஒரு சொல்லும் சொல்ல இடம் கொடாது பாடினார். அவருக்குப் பின்னால் இருந்த என்னை அவர் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

ஆனால், என்னை எவரும் எளிதில் தோற்கடிக்கப் போவதில்லை: 'ஐநூறு, ஐநூற்றி ஐம்பது, ஐநூற்றி எழுபத்தைந்து, அறுநூறு' என்று அடிக்கடி பாகவதரின் பின்னாடி குசுகுசுத்தபடி இருந்தேன்.

'அந்த ஈட்டுச் சங்கதி பற்றி நீங்கள் கொஞ்சமும் கவலைப்படத் தேவையில்லை. அதை யோசித்துப் பாருங்கள்! அதை எண்ணிப் பாருங்கள்! அதிலிருந்து நீங்கள் முழுக்க முழுக்க விடுபடலாம்' என்று இடைக்கிடை அருட்டினேன். அது அவருடைய பாட்டோடு பாட்டாகத் தணிந்த குரலில் நான் செய்த சமகால வர்ணனை. கட்டணம் எண்ணூற்றி ஐம்பது ரூபாவாக உயர்ந்ததும் அவர் இடைமறித்து, 'அந்த ஈட்டுத் தொகை திட்டவட்டமாக எவ்வளவு, உனக்கு நினைவிருக்கிறதா?' என்று தணிந்த குரலில் என்னைக் கேட்டார்.

'ஆயிரத்தி இருநூறு.'

'அதைக் கட்டினால் என்னை என் பாட்டில் இருக்க விட்டுவிடுவார்களா?'

'ஆமாம், கன காலத்துக்கு.'

'அதையிட்டு என்னைக் கட்டியவள் மேற்கொண்டு என்னைத் தொந்தரவு செய்யமாட்டாள் என்பதற்கு நீ உத்தரவாதம் தருவாயா?'

'ஆமாம்.'

'அப்படி என்றால் இதை ஆயிரத்தி இருநூறு ஆக்கு. இந்தக் கணமே மங்களம் பாடுகிறேன்.'

'ஓ! உது எக்கச்சக்கமான தொகை, மும்மடங்கு தொகை.'

'எக்கச்சக்கமோ? நான் அப்படி நினைக்கவில்லை. சங்கீதம் என்ன கடைச் சரக்கா? கடையில் விலைக்கு வாங்கும் புளியா? நீ அப்படித்தான் நினைக்கிறாய். அப்படி என்றால் நான் ஏன் என்னால் முடிந்தவரை உன்னுடன் பேரம் பேசக் கூடாது?'

சீமான் அப்படி முழங்கிவிட்டு, தொண்டையைச் செருமிப்போட்டு, யெதுகுல காம்போதியில் சின்னதோர் ஆலாபனையை ஆரம்பித்துவிட்டார். மாப்பிள்ளை உட்படப் பாகவதரின் இரசிகர்கள் எல்லோரும் தங்களை மறந்து சாய்ந்தாடத் தொடங்கிவிட்டார்கள். நடப்பதைப் பால்ராமுக்கு அறிவிப்பதற்காக அரங்கிலிருந்து குதித்து உள்ளுக்கு ஓடினேன். 'அவர் சாகும்வரை பாடட்டும். மேற்கொண்டு ஒரு தம்பிடிகூடத் தரமாட்டேன்' என்று பற்கள் நறநறக்கக் கத்தினான்.

'நெருப்புப் பிடித்துவிட்டது! நெருப்புப் பிடித்துவிட்டது! என்று கத்தட்டா, அல்லது அப்படி ஏதாவது செய்யட்டா?' என்று கேட்டேன்.

அதை யோசித்துப் பார்த்துவிட்டு, 'வேண்டாம். அது அபசகுனமாகிவிடும்' என்று சொன்னான்.

அதிகாலை இரண்டு மணி அளவில் பாகவதரின் கட்டணம் ஆயிரம் ரூபாவாக உயர்த்தப்பட்டுவிட்டது.

'ஆயிரத்தி இருநூறு ரூபாவுக்குக் குறையக்கூடாது. இந்தக் கணமே நிறுத்துகிறேன்' என்று பாகவதர் அழுங்குப் பிடியாக நின்றார். கிட்டத்தட்ட அரை மணித்தியாலம் கழித்து, பாகவதர் காபி இராகத்தில் வெகு நேர்த்தியாகப் பாடிக் கொண்டிருந்தபோது, நான் பால்ராமுடன் பேசித் தீர்த்து, அவர் கேட்ட தொகையைக் கொடுக்கச் சம்மதித்தேன்.

'இனி நீங்கள் நிற்பாட்டலாம்' என்றேன்.

'எங்கே காசு?' என்றுகேட்டார்.

'சரி, சரி, அதெல்லாம் கடைசியாக உரிய மரியாதையோடு தாம்பாளத்தில் வைத்துத் தருவான்'

என்று தொடங்கினேன்.

'தேவையில்லை' என்றார். இந்தக் கதை எல்லாம் பாட்டோடு பாட்டாகவே தணிந்த குரலில் பேசப்பட்டது. அது மட்டுமா? அவ்வளவு கண்களும் பார்த்திருக்க, அவர்களுக்குப் புரியாமல், தான் பாடிய இராகத்திலேயே அவர் பல வார்த்தைகளை உதிர்த்தார். எனக்கோ அவர் பின்னாடி இருந்து உரிய மரியாதையோடு அவர் கழுத்தைப் பிடித்துத் திருக வேண்டும் போல் இருந்தது. காசு கட்டத் தாமதித்தால் கட்டணம் மேலும் உயர்ந்துவிடலாம், பக்கவாத்தியகாரர்களும் குறிப்பறிந்து காசு கூடக் கேட்டு அடம் பிடிக்கலாம் என்று அஞ்சி, ஒரே ஓட்டமாக ஓடிப் போய்க் காசை வாங்கிக் கொண்டு வந்தேன். பாகவதர் அஷ்டபதியில் கண்ணன் வாழ்வின் மகிமையைப் பாடிக்கொண்டிருக்க, பன்னிரண்டு நூறு ரூபா தாள்களை எண்ணி அவர் மடியில் வைத்தேன்.

அதற்குப் பிறகு பால்ராம் சங்கீதத்தை அண்டியதே கிடையாது. 'உண்மைதான். அதெல்லாம் எங்களைப் போலத் தொழில் துறையாட்களுக்குச் சரிவராது. எங்களுக்கு அதைப் பற்றி ஒன்றும் தெரியாது. சங்கீதத்தோடு நாங்கள் சருவக்கூடாது. சங்கீத சபைக் காரியதரிசிகள் இந்த அலுவலை எப்படித்தான் சமாளிக்கிறார்களோ! நினைக்கவே ஆச்சரியமாக இருக்கிறது. அது கடினமான அலுவலாகத்தான் இருக்க வேண்டும்' என்று எப்போ பார்த்தாலும் சொல்லிக் கொண்டிருப்பான். ●

மணிவேலுப்பிள்ளை <manivelupillai@hotmail.com>

# கரையில் மோதும் நினைவலைகள்

## 2. யாழ் இந்துக் கல்லூரி

**நடேசன்**

ஒருவர் நமக்கு நல்லவராகவும் மற்றவருக்கு வில்லனாகவும், மற்றவருக்கு நல்லவராகவும் நமக்கு வில்லனாகவும் இருப்பதை பல தடவை பார்த்துள்ளேன்

2011இல் நான் இலங்கையில் நீர்கொழும்பில் ஒரு கடற்கரையோரக் ஹோட்டலில் தங்கியிருந்தேன். அதிகாலை நேரம். அலைகள் கரைமீது மோதும் ஓசை சங்கீதமாக இருந்தது. இரவு ஒரு மணியளவில் கட்டுநாயக்கா ஏர்போட்டால் வந்து படுத்தேன் ஆனாலும், அவுஸ்திரேலிய நேரத்திற்கு பழக்கமான உடல் என்பதால் கண் விழித்துவிட்டேன். உடல் அயர்வாக இருந்தது.

எனது மோபைல் அடித்தது.

நான் இலங்கைக்கு வந்த காலத்திலே, எனது மகனோடு மனைவியும் வருங்கால மருமகளின் குடும்பமும் திருமணத்திற்காக நகை, சேலை வகையறாக்களை எடுப்பதற்காக சென்றிருந்தார்கள்

அப்பொழுது எனது மகன் தொலைபேசியில், “சிறி அங்கிளது பாஸ்போட்டை வாங்கி சென்னை ஏர்போட்டில் வைத்துவிட்டார்கள்.”



“ஏன்?”

“அவரது பெயரில் தேடப்படும் ஒருவர் இருப்பதாக நினைக்கிறார்கள்.”

மனைவி என்னிடம் பேசினார். அப்பொழுது சொன்னேன்: “இலங்கையில் ஏதாவது நடந்தால் தெரிந்தவர்கள் யாரையாவது பிடித்து ஏதாவது பார்க்க முடியும். இந்தியாவில் ஒன்றும் செய்ய முடியாது. பாவம் சிறி விசாரித்துவிட்டுக் கொடுப்பார்கள் என நினைக்கிறேன்.”

அப்பொழுது என் மனைவி, “உங்களுக்கு தெரிந்த அந்த மிருக வைத்தியர், அவுஸ்திரேலியாவில் இருக்கிறாரே, அவரது பெயர் சிறிஸ்கந்தராஜாதானே?

“எவர்?”

“நாங்கள் அவுஸ்திரேலியா வந்ததுமே போய் சந்தித்தோம்.”

“டாக்டர் சிறிஸ்கந்தராஜாவா?”

“அவரேதான், அவர் விடுதலைப்புலி ஆதாரவாளர் அல்லவா?”

“ஆமாம், ஆனால் அவரை ஏன் இவர்கள் தேடவேண்டும்?”

“எனக்குத் தெரிந்தவரையில் அவரை என நினைக்கிறேன். அவரது தகப்பனது பெயரும் சரியாகப் பொருந்துகிறது.”

“அடப்பாவமே யாரோ ஒருவர் என எண்ணி எந்த அரசியலிலும் தலை வைக்காதவரைப் பிடித்து, குறைந்தபட்சம் படத்தையாவது வைத்திருக்கலாமே? இப்படித்தான் இலங்கையில் இருந்துபோன ஹெஸ்புல்லா என்றொருவரை, அமரிக்க இமிக்கிரேசன், இவர் லெபனானைச் சேர்ந்த தடைசெய்யப்பட்ட இயக்கத்தை சேர்ந்தவரோ என ஐந்து மணிநேரம் விசாரித்தார்கள்” என சொல்லிவிட்டு வைத்தேன்.

நான் 87இல் அவுஸ்திரேலியா வந்ததும் ஒருமாத காலத்தில் மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதை பலருடன் பேசினேன். நான் காத்திருப்பதுபோல் நாட்கள் காத்திராது. என் மகளின் மூன்றாவது பிறந்த தினம் வந்தது. மகனுக்கு அடுத்தமாதம் ஐந்தாவது வயதாக இருக்கும். எனக்கு முன்பாக அவுஸ்திரேலியா வந்த தர்மாவதி திருமணம் முடித்து சிட்னியில் இருக்கிறார். அவரும் அக்காலத்தில் பரிட்சைக்காக படித்துக் கொண்டிருந்தாலும், அவுஸ்திரேலியால் மிருக வைத்திய பரிட்சையை எடுத்து பாஸ் பண்ணுவது மிகவும் கஷ்டமான விடயம் எனப் பயப்படுத்தினார்

மோகன், மாலா இருவரும் விலங்கு மருத்துவர்கள். அவர்கள் அந்தத் துறையை விட்டு விஞ்ஞானத்தில் மேல்படிப்பு படித்துவிட்டு, விஞ்ஞானக் கூடங்களில் ஆராச்சியாளர்களாக வேலை செய்கிறார்கள். எல்லோரையும்விட அவுஸ்திரேலியாவில விலங்கு மருத்துவ பரீட்சையை வில்லங்கமானது என என்னைப் பயப்பிடுத்தியவர் என் மண்டைக்கயிறு மோகன் என்றே சொல்லவேண்டும்.

என்னைப் பொறுத்தவரை எனது மிருக வைத்தியம் அவ்வளவு இலகுவாக கிடைத்தது அல்ல, அதை விட்டு செல்வதற்கு. நாலு வருடப் படிப்பு மட்டுமல்ல அதற்கு மேல் பல சோதனைகளை தாண்டிவந்தேன்.

பேராதனைப் பல்கலைக்கழகத்திற்குள் புகுந்தது இலகுவானதல்ல.

1974ஆம்ஆண்டு இலங்கையில் தரப்படுத்தலும் மாவட்டரீதியாக குறிப்பிட்ட மாணவர்களை எடுத்தலும் என்ற முறை அமூலாகிய வருடம். எனக்கு முதல் வருடத்தில் தரப்படுத்தல் மட்டுமே இருந்தது. அடுத்த வருடத்தில் தரப்படுத்தலை நீக்கி மாவட்டமுறை மட்டும் வைத்திருந்தார்கள். எனது வருடத்தில் எனது வகுப்பில் இருந்த 20 பேரில் நான் ஒருவனே பல்கலைக்கழகம் சென்றேன். யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியிலே 5 பேர் மட்டும் சென்றது வரலாற்று விடயம். வழமையாக 50 - 60 பேர் என பல்கலைக்கழகத்திற்கு செல்வார்கள்.

1974இன் கடைசியில் என நினைக்கிறேன். நடுப்பகல். யாழ்ப்பாணத்து வெயில் வெளியே தணலாக இருந்தது. உள்ளே நுவரெலியாவின் சீதோஸ்ணத்தை நடுங்கியபடி



பேராதனைப் பல்கலைக்கழகம்

உணர்ந்தேன். நீங்கள் நினைப்பதுபோல் ஏர்கண்டிசன் எல்லாம் இல்லை. பயம்தான்.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி அதிபரின் அறையின் உள்ளே நின்றேன். ஐந்து மாணவர்கள் பல்கலைக்கழகம் செல்ல இருப்பதால், அதிபர் சபாலிங்த்தின் அறையில் அவரது மேசையின் முன்பாக, ஐந்து நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. அந்த நாற்காலிகளில் நாங்கள் இருந்து பல்கலைக்கழகம் செல்லத் தேவையான பத்திரங்களை நிரப்ப அதில் அதிபர் கையெழுத்திட வேண்டும். மற்ற நான்கு பேர்களில் இருவர் பொறியியலுக்கும் இருவர் கலைப்பீடத்திற்கும் செல்பவர்கள். மற்றவர்கள் அவரவர் கதிரையில் கலாதியாக இருந்தார்கள். பல்கலைக்கழகம் போகும் சந்தோசத்தில் விறைத்த உடலுடன் நிமிர்ந்தபடி இருந்தார்கள். போதாக்குறைக்கு எனது நாற்காலி அதிபரின் வலது புறத்தில் கை எட்டும் தூரத்தில்.

நான் மட்டும் தலை கவிழ்ந்தபடி குற்றம் செய்துவிட்டு நிற்கும் மாணவனாக நின்றேன்.

சுபாலிங்கம் என்னை நோக்கினார். நான் அவரை நோக்கினேன். இருவரும் சில கணங்கள் பார்த்தபின்பு என்னை “சிட் டவுன”என்றார்.

“இவன் என்னிடமிருந்து தப்புகிறான். எப்படியும் நன்னடத்தைக்கு சேட்டிபிக்கற் வாங்க வருவான். அப்போது பார்த்துக்கொள்ள முடியும் என நினைத்தது பிழைத்துவிட்டதே. அப்பப்ப விடயத்தைக் கவனித்திருக்க வேண்டும்.”

குரலில் அதிகாரம் இருந்தது. மெதுவாக பத்திரங்களை நிரப்பியதும் மீண்டும் ஒரு முறை பார்த்துவிட்டு தனது கையொப்பத்தை வைத்தார். அதற்கு ஐந்து நிமிடங்கள் எடுத்திருக்கும் ஆனால், அது எனக்கு ஐந்து யுகங்களாக இருந்தது. ஒருக்கா இரண்டு தரமா அந்த மனுசனிடம் பிரச்சினைப்பட்டது. மூன்று முறைகள் அவரோடு உரச வேண்டி வந்தது.

பத்தாம் வகுப்பில் படித்த காலத்தில் சபாலிங்கம் எங்களுக்கு அதிபராக நியமிக்கப்பட்டார். அவர் வரும்போது அவரது யாழ் மத்திய கல்லூரியைக் கலக்கி எடுத்தவர் என்ற மெய்க்கீர்த்தியும் காற்றோடு வண்ணார்பண்ணைக்கு வந்தது.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் எல்லாரும்போல் கணிதம் படித்தபோது, அது எனது மூளையில் ஏறாத படியால்,இரண்டாவது தரமாக பத்தாம் வகுப்பில் மீண்டும் உயிரியல் விஞ்ஞானம் படித்த காலம். பாடசாலைக்கு ஒழுங்காகப் போவதில்லை. ஓட்டுமடம் பகுதியில் ஒரு ரியூசன் வகுப்பை முடித்துக்கொண்டு, நல்லூரரை நோக்கி அரசடி வீதியால் மெதுவான மாலைக் கருக்கலில் பல நண்பர்களோடு வந்தேன். அதிபர் சபாலிங்கத்தின் கற்பகம் என்ற வீடு வந்ததும் என்னோடு வந்தவர்கள் தங்களை மறந்து,“அடோய் சபாலிங்கம” எனக் கத்திவிட்டு சைக்கிளில் வேகமாக ஓடினார்கள். எனக்கு வேறு வழியில்லை நானும் அவர்களுடன் ஓடினேன் நல்லூர் கோவிலை நோக்கி.

அதிபர் சபாலிங்கம், அவரது தம்பி கனகலிங்கம் (அவரும் அக்கால பரமேஸ்வராக் கல்லூரி அதிபர்), அதிபர் சபாலிங்கத்தின் மூன்று மகன்களும் அந்த ரோட்டில் இரண்டு கார்களில் தொடர்ந்து வந்தார்கள். இதையறியாது நாங்கள் ஜனசக்தி சமூக நிலையத்தில் ஓய்வெடுத்து எங்கள் வீரத்தை பெருமையுடன் பேசிக் கொண்டிருந்தோம். இரண்டு கார்கள் ஒன்றின் பின் ஒன்றாக வந்து வேகமாக பிரேக் போட்டு நடுவீதியில்

நின்றன.

அது ஒரு வெள்ளிக்கிழமை. இரண்டு பக்கத்தாலும் நல்லூர் கோயிலுக்கு வந்தும் போய்க்கொண்டும் இருந்த பக்தர்கள். காரின் பிரேக்கில் பலர் அதிர்ந்து போய்விட்டார்கள். ஒரு காரில் இறங்கியவர்களில் அதிபர் சபாலிங்கம் என்னைப் பாய்ந்து பிடித்து சேட்டில் உலுப்பியபடி தனது காரில் ஏறு என்று கேட்டபோது நான், எனது சைக்கிளை விட்டு வரமுடியாது என மறுத்தேன். அக்காலத்தில் எனது பெரிய சொத்து அந்த பிளஸ்ஏ சைக்கிளே.

அவரது கை எனது சேட்டில் இருந்தபோது நான் பின்பகுதியில் சாய்ந்தபடி வைத்திருந்த எனது சைக்கிள் நிலத்தில் விழுந்தது. நானும் நிலத்தில் விழுந்தேன்.

அரசடி எனப்படும் அந்த பகுதியில் வசிப்பவர்களுக்கு என்னைத் தெரியும். நான் அங்குள்ள ஜனசக்தி வாசகசாலையில் சஞ்சிகைகளான குமரனையும் மல்லிகையையும் வாசிப்பதற்கு அங்கு நிற்பதால் அவர்களுக்கு என்னை அறிமுகம். ஆனால், அதிபரைத் தெரியாது.

அவர்களில் ஒருவர், "ஏன் தம்பியைத் தாக்குகிறீர்கள்?" என்றபோது, அதிபரின் மகன் அவரைத் தாக்கியதும், சுற்றி நின்றவர்கள் அதிபரின் மகனைத் தாக்க, அவர் சித்தப்பா சித்தப்பா என்றார். அங்கு அப்பொழுது சிறிய வளைகுடாப் போர் நடந்தது.

சுதாரித்துக்கொண்டு எழுந்து, அந்த கிளைமாக்ஸ காட்சியை நான் பார்த்துக் கொண்டிருந்தபோது, அதிபர் சபாலிங்கம், "உன்னை பாடசாலையில் பார்த்துக்கொள்கிறேன்" என சொல்லி சேட்டிலிருந்து கையை எடுத்து, பின் வாங்கிச் சென்று காரில் ஏறினார்கள். சண்டையைப் பார்த்த பக்தர்கள் வந்து, மத்தியஸ்தம் செய்து, அதிபரையும் குடும்பத்தினரையும் அமைதியாக காரில் போகும்படி செய்தார்கள். அடுத்த நாள் பாடசாலைக்கு சென்றபோது எனக்கு மாணவர்கள் மத்தியில் பெரிய வரவேற்பு, அக்காலத்து ஹாஸ்டலின் முன்பாக நின்ற தேக்கு மரத்திற்குக் கீழ் நடந்தது. அந்த வரவேற்பு எனது பயத்தை மேலும் கூட்டியது. அன்றிலிருந்து நான் நடுங்கியபடி உயிர் வாழ்ந்தேன். பூனையைக் கண்டால் பொந்தில் பதுங்கும் எலியும்போல். இரண்டு வருடங்கள் ஏதோ அதிர்ஸ்டத்தால் நான் எந்த பிரச்சினையிலும் மாட்டவில்லை.

12 வகுப்பு பரீட்சை முடிந்த பின்பு நான் தலைம யிரைக் கழுத்துவரை வைத்திருந்தேன். அக்காலத்தில் எனக்கு காதலியும் இருந்ததால் அக்காலத்து பாஷன்படி இருந்தேன். ஒரு நாள் எனது பின்பாக வந்த அதிபர் சபாலிங்கம், கையில் பிடித்து என்னைத் தனது அறைக்கு அழைத்துச் சென்றார். இனி நான் போஸ்மோட்டத்திற்கே வெளியில் வருவேன் என நினைத்தபடி ஒடுங்கிய என்னிடம் முகக்கண்ணாடி ஒன்றைத் தந்து, என்னைப் பாரக்கச் சொல்லி, "உன்னைப் பார், பக்கிங்காம் பலஸ் கூர்க்கா மாதிரி இருக்கிறாய். இது நல்லா இல்லை. தலைமயிர் வெட்டாவிடில் இனிமேல் பாடசாலை வரவேண்டாம்"என மிகவும் பொறுமையாகக் கூறினார்.

இதைப் பற்றி ஆலோசனை கேட்டபோது எனது நண்பர்கள் அவருக்கு மயிரின் அருமை தெரியாது (அவருக்கு மொட்டைத் தலை) என நக்கலாக சொன்னார்கள். நானும் ஏற்கனவே பரீட்சை எழுதிவிட்டேன் என்பதால் தலைமயிரை வெட்டவில்லை. பரீட்சையில் பாஸ் பண்ணுவேன் என என்னில் நம்பிக்கை யிருந்தது. பாடசாலைக்கு வருவது லைப்ரரியில் புத்தகம் எடுப்பதற்கு மட்டும்தான். அவரிடம் பிடிபடாமல் சில காலம் லைப்ரரிக்குப் போய் வந்தேன்.

நல்ல காலம் தொடர்ந்து வராது. தம்பி காத்து மாறும் என்பார்கள்.

யாழ் இந்துக் கல்லூரியில், காங்கேசன் துறை வீதியில் மாணவர்கள் மானிப்பாய் பக்கமிருந்து டிபிள் டெக்கர் பஸ்சில் இறங்கும்போது, வாசலில் நிற்கும் மாணவிகள் இறங்கி அவர்களுக்கு வழிவிடுவார்கள். முக்கியமாக கொக்குவில் பக்கத்தில் ஏறிய வேம்படி பெண்கள் அதில் இருப்பார்கள். அவர்களை விசில் அடிக்க அக்காலத்து ஒரு மாணவர்கள் கூட்டம் அந்த தரிப்பில் நிற்கும். இந்த நாளாந்த நடவடிக்கையை அவதானித்த அந்த வழியால் காரில் செல்லும் நீதிபதி இதை அதிபருக்குச் சொல்லிவிட்டார்.

இப்படியான மாணவர் கூட்டம் மீண்டும் பாடசாலைக்கு வரும். அவர்களைக் கோழி அமர்த்துவதுபோல் அமர்த்துவதற்காக அதிபர் விளையாட்டு மைதானத்தில் பதுங்கி நிற்கிறார். அந்த மாணவர்கள் அன்று பாடசாலைக்கு வராமலே புதிதாக திரையிட்ட படம் பார்க்கச் செல்கிறார்கள். அப்பொழுது அவர்களோடு நின்ற நான் மட்டும் மீண்டும் லைப்ரரியில் எடுத்த புத்தகத்தைக் கொடுக்க மீண்டும் உள்ளே வருகிறேன்.

புலி பிடிக்கப்போன அதிபருக்கு எலியாக என்னைக் கண்டதால், விளையாட்டு மைதானத்தில் ஒழித்து நின்றவர், என்னைத் துரத்துகிறார். நான் அவருக்குப் பிடிபடாமல் பாடசாலையின் உள்ளே சென்று வகுப்புகளின் கொரிடோரில் பிரேயர் ஹோலை நோக்கி வேகமாக செல்கிறேன். இருவருக்குமிடையே சிறிது தூரமிருந்தது. என்னைப் பிடிக்கும்படி அக்காலத்து மாணவர் தலைவரான இராஜகுலசிங்கத்திடம் (பாபு) உத்தரவிட்டபோது அவன் என்னைப் பிடிக்க நான் அவனிடமிருந்து விலக முயற்சித்தபோது அதிபர் வந்து என்னைப் பிடித்துவிட்டார்.

"உன்னைப் பாடசாலைக்கு வரவேண்டாம் என்று சொன்னேன். வெளியே போ" என ஆங்கிலத்தில் சொல்லிய பின்புதான் அடிப்பதற்குக் கையை ஓங்கினார். அவரது வார்த்தைக்கும் செயலுக்கும் இடையே இருந்த இடைவெளியில் அவரது முதல் கட்டளையை சிரமேல் கொண்டு அந்த கொரிடோரில் இருந்து கீழே பாய்ந்தேன். அவரது விசுக்கிய கையால் விலகிய காற்று எனது முதுகில் பட்டது. கிட்டத்தட்ட அரை மீட்டர் உயரமான கொரிடோரில் அவரால் உடன் இறங்க முடியவில்லை. அப்படியே பாடசாலைக்கு வெளியே வந்துவிட்டேன். அதன் பிறகு 8-9 மாதம் பின்பாக இப்பொழுது பல்கலைக்கழகப் பத்திரங்களை நிரப்ப நிற்கிறேன். அக்காலத்தில் எங்களுக்கு அவரே இலங்கை இராணுவம், அவரே பொட்டம்மான்.

இப்படி பல்கலைக்கழகத்திற்கு சென்றாலும் அங்கும் எனது பட்டப்படிப்பை முடிக்காமல் விடுவதற்கான சந்தர்ப்பம் ஏற்பட்டது.

மூன்று தடவைகள் ஒரே பாடத்தில் பெ யிலாகினேன். பலமுறை பல்கலைக்கழகத்தை விட




நினைத்தேன். எனது காதலி தடுத்ததால் தொடர்ந்தேன். அங்கு சபாலிங்கமில்லை, மகாலிங்கம். வைரோலஜி விரிவுரையாளர் மகாலிங்கம் எனது வில்லனாக இருந்தார்.

மூன்றாவதுவருடத்தில் படித்துக்கொண்டிருந்தபோது ஒருபெண் விரிவுரையாளர், "நீ ஏன் மைக்ரோபயலஜி நல்லா செய்யவில்லை. நான் நன்றாகப் படிப்பிக்கவில்லையா?"

"இல்லையே நான் நல்லா செய்தனான்."

"ஆர் சொன்னது?"

"டாக்டர் மகாலிங்கம்."

"நான் போய்க் கேட்கிறேன்."

"நான் சொன்னது எனக் கேட்கவேண்டாம்."

நேரடியாக டாக்டர் மகாலிங்கம் கேட்டபோது, "யார் சொன்னது உனக்கு?"

அந்தப் பெண் விரிவுரையாளர் பெயரை மறைக்க முடியவில்லை

"கெட் அவுட்" என்றார்.

அவரது முகத்தில் கோபம் பொங்கியது.

இப்படி ஏன் மனிதன் கோபப்படவேண்டும்? நான் சாதாரணமாகக் கேட்டதில் என்ன பிழை? இவருக்குப் பிரச்சினை நான் பெண் விரிவுரையாளரிடமிருந்து அறிந்ததா? இல்லை அந்த விரிவுரையாளருக்குப் பரிட்சை விடயங்கள் தெரிந்ததா?

புரியாத புதிராக அவரது நடத்தை இருந்ததால் இதன் பின்பு நான் விரிவுரைகளுக்குப் போவதில்லை. இடைக்கிடையே நான் காதலியோடு போகும்போது அவரும் நோக்குவார் நானும் நோக்குவேன்.

மீண்டும் நான் பெயிலானேன்.

இறுதியாண்டில் பரிட்சை எடுத்த பின்பு, என் முக்கிய இரண்டு விரிவுரையாளர்களான டாக்டர் பெரேராவும் டாக்டர் பொங்சோவும் என்னைச் சந்தித்தார்கள். "நீ இறுதியாண்டில் நன்றாக பாஸ் பண்ணி கிளாஸ் எடுத்திருக்கிறாய். ஒரு பாடத்தில் யு. ஆனால், மூன்றாவது வருடப் பாடமான மைக்ரோபயலஜியை பெயலாகிவிட்டாய். பல்கலைக்கழக முதல்வரிடம் இந்த இறுதிப் பரிட்சை முடிவுகளை இப்பொழுது வெளியிடாது வைக்கச்சொல்லி விண்ணப்பம் செய்" என்றார்கள்.

நான் சென்று பல்கலைக்கழக முதல்வரிடம் கேட்டபோது அவர் சம்மதித்தாலும், பின்பு மற்றவர்களது அழுத்தத்தால் எனது இறுதி பரிட்சை முடிவுகள் ரத்து செய்யப்பட்டது.

மைக்ரோபயலஜி விரிவுரையாளர் மகாலிங்கம் இருக்கும்வரை பாஸ் பண்ணமுடியாது என்ற முடிவுக்கு வந்துவிட்டேன். கிட்டத்தட்ட 4 கிலோக்கள் குறைந்து சோமாலியராகி விட்டேன். பேராதனை பல்கலைக்கழக இரசாயன கூடத்தில் இருக்கவேண்டிய அமிலம் எனது வயிற்றில் தேங்கி இரைப்பையை அரித்தது. மனத்துக்குள் பலமுறை பேராசிரியர் மகாலிங்கத்தைக் கொலை செய்தேன். அக்காலத்தில் அமைதிக் காலம். ஆயுதங்கள் கிடைக்காது. ஒரு முறை கல்லால் இருட்டில் தாக்க எடுத்த முயற்சியை நண்பர்கள் தடுத்துவிட்டார்கள்

இப்படி இருந்த காலத்தில் மைக்ரோபயலஜின் பேராசிரியர் விஜவந்தா வெளிநாட்டில் அவரது லீவு முடித்தபின், பாஞ்சாலிக்கு கண்ணனாகினார். வீட்டுக்கு என்னையும் எனது நண்பன் சில்வாவையும் அழைத்து தேநீர் தந்து, "மகனே உன்னைப் பற்றி அறிந்தேன். பயப்பட வேண்டாம் இம்முறை எழுது" என்றார்.

நாப்பது நாட்களில் அந்த பரிட்சையில் தேறி, அதன்பின்பு இறுதியாண்டுகள் பரிட்சையை மீண்டும் எடுத்து பாசாகினேன். ஆனால், எனது விசேட சித்திகள் அற்று சாதாரணமாக பாசாகினேன். இப்படியாக பாஸ் பண்ணினாலும் எனது நண்பர்களுக்கும் எனக்கும் நாப்பது நாட்கள் வித்தியாசமே இருந்து.

இப்படி மிகவும் கஷ்டப்பட்டு பாஸாகிய எனது மிருக வைத்தியத்தைத் தொடர்வதா இல்லையா என்பதைக் கேட்க டாக்டர் சிறிஸ்கந்தராஜாவிடம் போக விரும்பினேன். துங்காபேயில் இருந்து இரயிலில் தனியாக ரிச்மண்ட் செல்லவிருந்த என்னை, காரில் கொண்டு செல்லும்படி மாலா அக்கா மோகனிடம் கூறினார்

டாக்டர் சிறிஸ்கந்தராஜா இலங்கையில் மிருக வைத்தியராகி, பின்பு அவுஸ்திரேலியாவில் மேல்படிப்பு படித்து, பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராக இருப்பவர். அவரிடம் கேட்டபோது அவரும் மோகனைப் போல் இங்கு மிருக வைத்தியம் கடினம் என ஆலோசனை கூறி, தற்போது முக்கியமான பகுதியான பயோரெக்னோலஜி செய்யலாம் என்றார். அவரது ஆலோசனைப்படி நியு சவுத் வேல்ஸ் பல்கலைக்கழகத்தில் விண்ணப்பம் செய்தேன்.

அந்தவிதத்தில் அவரை எனது வழிகாட்டியாக நினைத்தேன். மெல்பேனில் ஒருகாலத்திலும் விடுதலைப்புலிகளின் மாவீரர் நிகழ்ச்சிக்குப் போகாத நான் அவர் பேசவந்த ஒரு வருட நிகழ்வுக்கு மனைவியுடன் சென்றேன். அவர் பேசி முடிந்ததும் வெளியே சென்ற என்னைப் பார்த்துத் தெரிந்தவர்கள் கேட்டனர்: "ஏன் அரைவாசியில் போகிறீர்கள்?"

"இவர்களில் கொல்லப்பட்டவர்களுக்கு இதுவரை இருந்தேன். இவர்களால் கொல்லப்பட்டவர்களுக்கு அஞ்சலி செய்ய நானும் மனைவியும் வெளியே வந்தோம்" என்றேன்.

அவர்கள் முகங்களில் கவலை வந்தது.

டாக்டர் சிறிஸ்கந்தராஜாவின் ஆலோசனைப்படி பயோரெக்னோலஜி படித்து, அதில் வேலை பார்த்துக்கொண்டு, மிருக வைத்தியம் படித்து, என்னை மீண்டும் மிருக வைத்தியராக்கிக் கொண்டேன். ●

(தொடரும்)

**நடேசன் <uthayam12@gmail.com>**

### நார்மன் மெய்லர்

# கத்தியில் காதலைக் கண்ட கலைஞன்!

**ஸிந்துஜா**









"புத்தகங்கள் எழுதுவது என்பது ஆண்கள் குழந்தை பெற்றுக்கொள்வது போல."

-நார்மன் மெய்லர்

நாவல்கள், சுயசரிதை, கட்டுரைகள் என்று முப்பதுக்கும் மேலான நூல்களைப் படைத்த நார்மன் மெய்லர் தனது இரு நாவல்களுக்காக இருமுறை புலிட்சர் பரிசு பெற்றவர். உலகப் புகழ்பெற்ற எழுத்தாளரான எர்னெஸ்ட் ஹெமிங்வேயின் கிரீடத்துக்கு இளவல் நார்மன் மெய்லர் என்று கொண்டாடப்பட்டவர். தன்னுடைய 'நேக்கட் அண்ட் தி டெட்' என்ற முதல் நாவல் மூலம் 1948இல் அமெரிக்க இலக்கிய உலகில் பிரவேசித்த நார்மன் மெய்லர், போர்க் குணமுடையவராகவும் வெளிப்படையாகப் பேசிப் பிரச்சினைகளைச் சந்திப்பவராகவும்தான் அறிமுகமானார்.



மற்றவர்கள் கவனம் எப்போதும் தன் மேல் இருக்க வேண்டும் என்பதை ஒரு நியதி போல் கடைபிடித்தார்,நார்மன்மெய்லர்.சமகாலத்திய அமெரிக்க எழுத்தாளர்களைக் காட்டிலும் தன் பிம்பத்தைப் பெரிதாகக் காட்டிக்கொள்வதில் குறியாயிருந்து வெற்றிபெற்றார். இதற்கு அவரது சுயமான ஆளுமையும் ஆழ்ந்த சிந்தனையோட்டத்தைக் கொண்ட எழுத்தும் பெரும் காரணிகளாக இருந்தன. அவரது முதல் நாவலின் பின்னணி இரண்டாம் உலகப் போரை வைத்து எழுதப்பட்டதில் அவரது சுயசரிதையும் இருந்தது. அந்நாவல் வந்தபின், தொடர்ந்த சுமார் அறுபது ஆண்டுக் காலமும் அவர் எப்போதும் கூட்டத்தின் நடுநாயகனாக விளங்குவதில் விருப்பம் காட்டினார்.

திரைப்படம் டி.வி. ஆகியவற்றிலும் தன் தடத்தைப் பதித்த அவர், தான் பங்கு பெற்ற நிகழ்வுகளில் தடாலடியாகப் பேசிப் பிரச்சினைகளை உருவாக்குவதில் ஈடுபாடு உடையவராயிருந்தார். சபைக்கூச்சம் மெதுவாகத் தன் கருத்துக்களைத் தெரிவிப்பது ஆகியவற்றுக்கும் தனக்கும் சம்பந்தமில்லை என்பது போல மக்களின் கவனத்தைக் கவருவதற்கென்றே உரத்த குரலில் பேசினார். பெரிய காதுகளும் அகன்ற மார்பும் (56 இன்ச்?) கவர்ச்சியான நீல நிறக் கண்களும் கருகருவென்ற முடியும் (இது பின்னாட்களில் பனி வெள்ளைக்கு வந்துவிட்டது!) கொண்டு கூட்டத்தில் உடனடியாக அடையாளம் கண்டுகொள்ள முடிந்த பிரபல நட்சத்திரம் போல வலம் வந்தார்.

மெய்லரைப் பற்றிச் சமூகத்தில் பலவித பிம்பங்கள் நிலவி வந்தன. பெருங் குடிகாரர், குடும்பத்தின் மீது அதிக பாசம் வைத்திருப்பவர், பெண் பித்தர், அரசியல்வாதி (நியூயார்க் மேயர் பதவிக்குப் போட்டியிட்டார்), இருத்தலியல் அறிஞர், யுத்த எதிர்ப்பாளர், பெண் விடுதலையையும் சுதந்திரத்தையும் எதிர்ப்பவர், சண்டைக்காரர் (குத்துச் சண்டையில் விருப்பம் உடையவர், சக எழுத்தாளர்களுடன் குத்துச் சண்டை போட்டதுண்டு!) என்று பல்வேறு முகங்கள் அவருக்கு இருந்தன.

வானூர்தி இயலில் பட்டம் பெற முதலில் ஆசைப்பட்ட மெய்லர் கல்லூரியில் சேர்ந்தபின் இலக்கியத்தின் மீது நாட்டம் கொண்டவரானார். ஒரு நாளைக்கு மூவாயிரம் வார்த்தைகளாவது எழுத வேண்டும்; அப்போதுதான் கழிசடையான எழுத்துக்கள் தானாகவே காணாமல் போகும் என்று உறுதியாக



நம்பினார். 'ஸ்டோரி' என்னும் பத்திரிகையில் அவரது முதல் கதை பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 1941இல் வெளியாகியது. பின்னர் ஒரு பைத்தியக்கார மருத்துவமனையை வைத்து ஆயிரம் பக்க நாவல் எழுத ஆரம்பித்தார். ஆனால், இது பிரசுரம் பெறவில்லை. இரண்டாம் உலகப் போரில் பங்குபெற்ற பின் தனது முதல் நாவலை எழுதினர். வெளிவந்த மூன்று மாதங்களுக்குள் அது இரண்டு லட்சம் பிரதிகள் விற்று சாதனை புரிந்து, அவரை உலகப் புகழ்பெற்ற எழுத்தாளராக அடையாளம் காட்டியது. இந்த நாவலைப் பற்றிக் கூறுகையில், "என் சிந்தனையின் ஒரு பாதி 'போரும் அமைதியும்' என்ற டால்ஸ்டாயின் உலகப் புகழ் பெற்ற நாவலுக்கு அடுத்ததாக என் நாவல் அமைந்துவிட்டதாகக் கூறியது. ஆனால், மற்றொரு பாதி எனக்கு எழுதவே தெரியாது; நான் மோசடிக்காரன் என்றது" என்று கூறினார்.

சமகாலத்து நடப்புக்களைப் பின்புலமாக வைத்து அவரது நாவல்கள் வெளியாகின. முதலாளித்துவத்துக்கும் சோஷலிசத்துக்கும் நடக்கும் போராட்டம், பிரபல திரைப்படக்கலைஞரும் எழுத்தாளருமான எலியா காசான் அமெரிக்க சட்டசபைக் கமிட்டி முன் எதிர்கொண்ட பிரச்சினைகள், அமெரிக்காவின் யுத்த வெறி, சந்திரனில் முதல் முதலாய் இறங்கிய அமெரிக்கரின் சாதனை, ஜனாதிபதி கென்னடியைச் சுட்டுக் கொன்ற ஆஸ்வால்ட் பற்றிய நாவல் ஆகியவை அவரது சிந்தனை ஓட்டத்தையும் சமூக அக்கறையையும் காண்பித்து வாசகர்களைக் கவர்ந்தன.

1955இல் மெய்லர் அவரது நண்பர்களுடன் சேர்ந்து 'வில்லேஜ் வாய்ஸ்' என்னும் பத்திரிகையைத் தொடங்கினார். அதில் அவர் எழுதிய கட்டுரைகள் அமெரிக்கக் கட்டுரை இலக்கியத்தின் திருப்பு முனையாக அமைந்தன. தைரியமும் மன எழுச்சியும் கவிநயமும் பயமுறுத்தலும் என ஓங்கி ஒலித்த குரல் பிரச்சினைகளின் ஆழங்களையும் விரிவுகளையும் தேடிக் கண்டடைந்து உண்மையைப் பிரதிபலித்து விகசித்தன. அன்றைய தினத்து கட்டுரைகளுக்கான கட்டுக்கோப்புகளை உடைத்தெறிந்து புதிய தடத்தில் வாசிப்பு அனுபவத்தை இக்கட்டுரைகள் எடுத்துச் சென்றன. உதாரணமாக 1957இல் அவர் எழுதிய 'The White Negro' மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியது. ஒரு வெள்ளைக்காரக் கடை முதலாளியை பதினெட்டு வயது நிரம்பிய இரு கறுப்பின இளைஞர்கள் கொலை செய்ததை, அந்த வன்முறையை இருத்தலியலின் நியதியாக, வெளிப்பாடாக அவர் ஆதரித்தார்.

அதே போல 1970களில் மெய்லர் தன்னைப் பெண்ணியவாதிகளின் எதிரி என்று அறிவித்தார். ஜெர்மெய்ன் க்ரீர் என்ற பிரபல பெண்ணிய எழுத்தாளருக்கு (The Female Eunuch என்ற பரபரப்பை ஏற்படுத்திய நூலுக்குச் சொந்தக்காரர்) எதிராக மன்ஹாட்டன் நகர ஹாலில் பேசுகையில், தான் குடும்பக் கட்டுப்பாட்டை அடியோடு வெறுப்பவன் என்று முழங்கினார். (அவருக்கு ஆறு மனைவிகள், ஒன்பது குழந்தைகள்!)

மெய்லரின் எழுத்தில் பொதுவாக ஒரு லேசான பரிகாசம் ஓடியதைக் காணலாம்:

> 'சொ்ரியின் கண்களில் கண்ணீர் - பத்து வருஷ துக்கம் ஒரு ஸ்பூன் அளவு அவளது கன்னத்தில் வடிந்தது.'



நோரிஸ் சர்ச் மெயிலர், நார்மன் மெயிலர், தங்கள் மகன் ஜான் பப்பல்லோ மெயிலருடன்



இரண்டாவது மனைவி அடில் மோரல்ஸ் மெயிலருடன்



'ஒரு பெண்ணை நீதிமன்றத்தில் சந்திக்கும் வரை அவளை உன்னால் புரிந்துகொள்ள முடியாது.'

'புண்படுத்தும் சொற்கள் இதயத்தின் கிடங்கில் வசிக்கின்றன.'

'சோசலிசத்தின் குறிக்கோள் மக்களின் துன்பத்தை அதிகரிப்பதுதான்.'

ஒரு தடவை மெய்லர், "நானும் சால் பெல்லோவும் (இலக்கியத்துக்கான நோபல் பரிசு பெற்றவர்), எங்களைப் போன்ற சிலரும் ஃபாக்னருக்கும் ஹெமிங்க்வேக்கும் முன் பெரிய எழுத்தாளர்கள் அல்ல" என்று கூறினார். ஆனால், அவரே பின்னாட்களில் தனது சமகால எழுத்தாளர்களில் தன்னைப் போன்ற சிறந்த எழுத்தாளர்கள் வேறு யாருமில்லை என்று மார்தட்டவும் செய்தார்.

நவம்பர் 19, 1960 அன்று நார்மன் மெய்லரின் வாழ்க்கையில் மிகப் பெரிய சறுக்கல் ஏற்பட்டது. அன்று அவர் நியூயார்க் நகர மேயர் பதவிக்குப் போட்டி யிடப் போவதை முன்னிட்டு ஒரு பார்ட்டி நடத்தினார். சுமார் இருநூறு விருந்தினர்கள் கலந்துகொண்ட நிகழ்ச்சியில், பிரபல கவிஞர் ஆலன் கின்ஸ்பேர்க், பிரபல புத்தக வெளியீட்டாளர் பார்னே ரோஸ், பிரபல விமரிசகர் லயோனல் ட்ரில்லிங் ஆகியோர் கலந்துகொண்டனர். அவர்களைத் தவிர மெய்லரின் பல தெரு நண்பர்களும் 'உதவாக்கரை' சிநேகிதங்களும் அதில் கலந்துகொண்டனர். (பின்னாளில் இந்த பார்ட்டியைப் பற்றி எழுதும் போது



சிறையில்

பார்னே ரோஸ், "என் வாழ்நாளில் இத்தகையதொரு மோசமான அஞ்சத்தக்க மனிதர்களை ஒரு பார்ட்டியில் நான் பார்த்திருக்கவில்லை" என்று குறிப்பிட்டார்.)

வந்திருந்தவர்களில் பலர் ஒருவருக்கொருவர் அடிதடியில் இறங்க அவர்களைச் சமாதானப்படுத்துவதே மெய்லருக்குப் பெரிய வேலையாகப் போய்விட்டது.



அவரே மிதமிஞ்சிய குடியில் அந்தச் சமயம் தாழ்ந்திருந்தார். திடீரென்று வந்திருந்தவர்களில் தன்னை ஆதரிப்பவர்கள், எதிர்ப்பவர்கள் என்று இரண்டு கூட்டமாக நிற்கும்படி கேட்டார். வந்திருந்தவர்களில் முக்கால்வாசிப் பேர் எதிர்ப்பாளர்களாக இருந்தார்கள். நிதானமிழந்த மெய்லர் வீட்டை விட்டு வெளியேறி, தெருவுக்குச் சென்று, அங்கிருந்தவர்களை வம்புக்கு இழுத்தார்.

மெய்லரின் மனைவியான பிரபல ஓவியர் அடில் மொராலே, "நார்மனுக்குத் தான் யார் என்பதே அச்சமயத்தில் மறந்துவிட்டது. தனது பெயர்கூட அவருக்கு ஞாபகம் இருக்கவில்லை. தெருவில் குத்துச் சண்டை நடந்து ஒரே கலவரம்" என்றார்.

ஒரு வழியாக அவர் அதிகாலை நாலரை மணிக்கு வீடு திரும்பினார். அப்போது அங்கே ஐந்தாறு பேர் மட்டும்தான் இருந்தார்கள். தள்ளாடியபடி வந்த அவரைப் பார்த்து மொராலே அவரது மோசமான நடத்தை குறித்துத் திட்டினார். இதனால் கோபமடைந்த மெய்லர், தன்னிடம் இருந்த இரண்டரை அங்குல நீளமுள்ள பேனாக் கத்தியை எடுத்து மனைவியைத் தாக்கினார். முதலில் முதுகிலும் இரண்டாவதாக நெஞ்சிலும் கத்தியால் குத்தினார். அதிர்ச்சியால் அங்கு உறைந்து நின்றவர்களைப் பார்த்து,"அவளைத் தொடாதீர்கள். அந்த பிட்ச் சாகட்டும்" என்றார். சிறிது நேரத்தில் மொராலே முதலில் குடும்ப மருத்துவரிடம் அழைத்துச் செல்லப்பட்டு பிறகு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார்.

முதலில் மொராலே தான் கண்ணாடிச் சில்லுகள் மீது காயம் பட்டுக்கொண்டதாக மருத்துவர்களிடம் கூறினார். ஆனால், மறுநாள் ஒரு தொலைக்காட்சி நேர்காணலில் மெய்லர் தனது பேனாக் கத்தியை உபயோகித்தது பற்றிக் கூறிவிட்டார். அதனால் மொராலே இரு தினங்கள் கழித்து போலீஸ் அதிகாரிகளிடம் உண்மையைக் கூற அவர்கள் உடனே மெய்லரைக் கைது செய்தார்கள்.

நீதிமன்றத்தில் மெய்லர் தன் குற்றத்தை ஒப்புக்கொண்டார். முதலில் பதினேழு நாட்கள் அவர் ஒரு மருத்துவமனையில் ஒப்படைக்கப்பட்டார். பிறகு நன்னடத்தையைப் பின்பற்றி வர வேண்டும் என்ற நிபந்தனையுடன் தண்டனை வழங்கப்பட்டது. (Suspended Sentence). வழக்கை விசாரித்த நீதிபதியிடம் மெய்லர், "என்னை மனநல விடுதி எதற்கும் அனுப்பிவிடக் கூடாது. ஏனெனில், அது என் இறுதிக் காலம் வரை நான் படைக்கும் எதிர்கால எழுத்துக்களின் மீது பெரிய கரும்புள்ளியாக வீற்றிருக்கும். மனநலம் குன்றியவனின் எழுத்து என என் படைப்புகளை எவரும் பார்க்க என்னால் சகித்துக்கொள்ள முடியாது" என்று கூறினார்.

மெய்லரின் இந்த நடத்தையைப் பற்றிப் பேசுகையில், ஜேம்ஸ் பால்ட்வின் என்னும் பிரபல அமெரிக்க எழுத்தாளர், "அரசியல்வாதியாகக் கனவுடன் நிர்மாணித்துக் கொண்டு, சிறையிலிருந்து வெளிவர மெய்லர் செய்த முயற்சி! இது வீட்டைக் கொளுத்தி உள்ளேயிருந்து வெளிவருவது போல" என்றார்.

மெய்லர் தன் மனைவியைத் தாக்கியதில் ஒருவித மெய்லரிசம் இருந்ததாகப் பலர் கருதினர். அவரது ஈகோவுக்கு விழுந்த அடியா அல்லது மன அழுத்தமா அல்லது அவர் மிகவும் விரும்பிய தாஸ்தோவ்ஸ்கியின் எழுத்தில் காணப்பட்ட சாத்தானின் மீதான வேட்கையைத் தனது வாழ்விலும் பரீட்சித்துப் பார்க்க விரும்பிய வேட்கையா? எது அவரைத் தனது மனைவியைத் தாக்கும் அளவுக்கு நிதானத்தை இழக்க வைத்தது?

'அமெரிக்கன் ட்ரீம்' என்னும் மெய்லரின் நாவலில் வரும் கதாநாயகன் தன் மனைவியிடம், "கத்தியை ஒருவன் உபயோகித்தால் இன்னும் கொஞ்சம் காதல் மீதமிருக்கிறது என்றுதான் அர்த்தம்" என்பான். இதைத்தான் மெய்லர் தனது வாழ்க்கையின் ஆதர்சமாகக் கொண்டாரோ என்று ஆச்சரியமாக இருக்கிறது. ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# பூமா ஈஸ்வரமூர்த்தி கவிதைகள்

1.

எழுகிறேன். கைலியை சரி செய்துகொள்கிறேன். சட்டையை அணிந்து கொள்கிறேன். படித்து வைத்திருந்த ஹிந்துவை கைக்கொள்கிறேன். அலைபேசியையும் கண்ணாடியையும் எடுத்துக்கொள்கிறேன். நிலைக் கண்ணாடி பார்த்துவிட்டு அறை நீங்குகிறேன். மேஜை மீது கலைந்து கிடந்த புத்தகங்கள் வெளியே போகத்தான் வேண்டுமா என்கிறது. வெளிவந்து கதவை நோக்கி நகருகிறேன். வழியில் கவனிக்க ஆளில்லாமல் தன்னை நிகழ்த்திக் கொண்டிருந்த தொலைகாட்சியை அணைக்கிறேன். தொலைக்காட்சி பெட்டிக்கு கீழ் வரிசையாக நிற்கும் நாட்டுப்புற பொம்மைகள் புன்னைகைகள் தருகிறது. கொண்டு வந்த ஹிந்துவை ஏற்கனவே அடுக்கி வைக்கப்பெற்ற இடத்தில் வைக்கிறேன். வழக்கமாக இந்த இடத்தை கடந்து போகும் போது உயரத்தில் இருக்கும் நீலநிற கடிகாரத்தைப் பார்ப்பது வழக்கம். பார்க்கிறேன். கதவுக்கு உள்ளேயும் வெளியேயும் ஒரு மிதியடி உண்டு. உள்ளே உள்ள கரும் பச்சை மிதியடி கோணலாக கிடக்கிறது. சரி செய்கிறேன். யார் என்று கேட்காமலையே கதவைத் திறந்தேன். யாருமில்லை. வெளிவந்து இரு புறமும் பார்த்தேன். யாருமில்லைதான். அழைப்பு மணி ஒலித்த மாதிரிதான் இருந்தது.

2.



அவரா அவராயென நீங்கள் எதிபார்த்திருக்கும்
அவர் வரவில்லை
நான்தான் வந்திருக்கிறேன் பரவாயில்லையா
காகத்திற்கு நான் சொன்னது
உன்னைக் காணவே காத்திருக்கிறேன்
தீச்சுடர் கண்களும் சாம்பல் கறுப்பு உடலும்
சின்னஞ் சிறுகால்களும் கால் நகங்களும்
தொட்டால் வழுக்கும் அலகுகளும்
அடர் குரலும்
வான் பறக்கும் விருப்பமும்
மரங்களில் தஞ்சமும்
எனக்கு நெருக்கமானதுதான்

3.

எறும்பாக இருந்தேன்
புல்லைப் பார்த்தபோது
இது என்ன இவ்வளவு உயரம்
எப்படி இதன் மீது ஊர்ந்து உச்ச நுனி போய்
எல்லாம் பார்க்கப் போகிறேன்
இப்போது நான் எறும்பாக இல்லை
எறும்புகள்தான் என் மீது ஊர்ந்து
உச்சி போகிறார்கள் இப்போது
என்னையும் இழுத்துக்கொண்டு. ●

பூமா ஈஸ்வரமூர்த்தி <seathu1952@gmail.com>

## கேரளா - தமிழகம்

# பயணம்

### சில தெறிப்புகள்

**இளங்கோ**

கொச்சியில் இருக்கும் கலைக்கூடங்கள் என்னை எப்போதும் வசீகரிப்பவை. கடந்தமுறை கொச்சியிற்குச் சென்றபோது Kochi-Muziris Biennale நடைபெற்ற காலம் என்பதால் கலைகளின் கொண்டாட்டமாக இருந்தது. இம்முறை அந்தக் காலம் இல்லாதபடியால் நிரந்தரமாக அங்கே இருக்கும் கலைக்கூடங்களை மட்டுமே பார்க்க முடிந்தது. ஒருநாள் முழுதும் அவற்றைத் தேடித் தேடிப் பார்த்தேன். இந்தக் கலைக்கூடங்களில் பொதுவாக முன்பக்கத்தில் இவ்வாறான ஓவியங்கள் பார்ப்பதற்கும் / (சிலவேளைகளில்) விற்பதற்கும் காட்சிப்படுத்தியிருப்பார்கள். அதைத்தாண்டிச் சென்றால் cafeக்கள் உள்ளே இருக்கும். இந்த இடங்களில் தனியே ஓவியங்கள் என்றில்லாது இசை, இன்னபிற விடயங்களும் நிகழ்ந்தபடி இருக்கும்.



David Hall Art Cafeயில் அற்புதமான வடிவமைப்புடன் பியானோ உள்ளிட்ட வாத்தியங்களுடன் இசை நிகழ்ச்சி நடத்தும் இடமும் இருந்தது. மற்றது கஃபேயில் ஏதும் காசு கொடுத்து வாங்காவிட்டாலும், ஆறுதலாக ஓவியங்களை இலவசமாக இரசிக்கலாம். நான் David Hallஇற்குப் போனபோது, அதற்குப் பொறுப்பாக இருந்தவர் தானாகவே வந்து இந்த இடத்தின் வரலாறு, இதில் காட்சிக்கு வைத்திருக்கும் ஓவியர்கள் பற்றியெல்லாம் மலர்ந்த முகத்துடன் விளக்கமளித்தார்.

உலகில் ஆயிரத்தெட்டு எரியும் பிரச்சினைகள் இருக்கும்போது கலைகள் அவசியமா என்ற கேள்விகள் இருந்தாலும், இவை நம் உள்மனதின் அந்தரங்கங்களோடு உரையாடுபவை. எப்போதும் எதையோ பெறுவதற்காய் ஓடும் வாழ்க்கையிற்கு கொஞ்சம் 'ஆசுவாசத்தைத்' தருபவை. கடந்தமுறை ஸ்பெயினுக்குப் போனபோது ஒரு மியூசியத்தின் ஒதுக்குப்புறத்தில் சின்னக் கிற்றாரை வைத்துப் பாடல்களைப் பாடிய இசைஞனின் குரலில், என்னோடு கூட வந்த நண்பர் கண்ணீர்விட்டு அழத்தொடங்கினார். Once againஇல் தனது மகளோடு இசை நிகழ்ச்சி கேட்கும் பெண் சட்டென்று உடைந்து அழுவாரே, அதைவிடவும் அதிகமாகவும். இவற்றுக்கெல்லாம் ஏன் என்று கேட்டால் அவர்களிடம் தெளிவான பதில் இருப்பதில்லை. ஆனால், நம் ஆழ்மனதின் எதையோ கலை தீண்டுகிறது. நாம் அதன் அலைவரிசைக்குப் போகும்போது நம்மை அறியாமலே நமக்குள் இறுக்கிப்பிடித்து வைத்திருக்கும் அழுத்தங்கள் கரைந்துபோகின்றன. நாங்கள் மீண்டும் புத்துணர்ச்சியைப் பெறுகின்றோம்.

இவ்வாறே ஒருநாள் மழை பொழிவதும் விடுவதுமாக இருந்த இரவு வேளையில் கொச்சியிலிருந்த பிரின்ஸஸ் வீதியில் நடந்துகொண்டிருந்தேன். திண்ணை வைத்த சிறு காலரியில் நீண்ட தாடி வைத்த, வேட்டியை மடித்துக்கட்டிய ஒரு ஓவியர் தன்பாட்டில் பேசியபடி ஒரு பெரிய கான்வாஸில் வர்ணங்களை விசிறியபடி இருந்தார். நான் அவர் வரைவதை வெளி இருட்டிலிருந்து பார்த்துக் கொண்டிருக்க, எனது மனது என்னையறியாமலே எடையற்றுப் போய்க்கொண்டிருப்பது போல உணர்ந்தேன். அவரோடு பேச விரும்பியபோதும், அவர் தன் ஓவியத்தோடு தோய்ந்துவிட்ட அந்த மனோநிலையைக் குழப்பிவிடக்கூடாதென்ற கவனத்துடன் அவர் என்னைப் பார்க்கமுன்னரே விலத்திப் போயிருந்தேன்.

உண்மையாகவே கலையில் தோய்ந்த மனங்கள் தம்மை முன்னிறுத்துவதில்லை. தம் கண்களுக்குப் புலப்படாத யாருக்காவோ அவர்கள் வரைந்துகொண்டோ, இசைத்துக்கொண்டோ, எழுதிக்கொண்டோ இருக்கின்றார்கள். அந்த அலைவரிசையை நாம் சரியாகக் கண்டுபிடிக்கும்போது அந்தக் கலை நமக்கான கலையாகவும் ஆகிவிடுகின்றது.

தொடுபுழாவில் நின்றபோது லெவின் என்றொரு நண்பரைச் சந்தித்திருந்தேன். மிகச் சுவாரசியமான மனிதர். எந்த விடயம் கேட்டாலும் அதுபற்றித் தெரிந்திருப்பார். சில ஆண்டுகளுக்கு முன்னர் கார் விபத்தைச் சந்தித்து, அதன் விளைவுகள் உடனே தெரியாதுவிடினும் 6 மாதங்களின் பின் அது நரம்புகளைத் தாக்கியது அறிந்தபோது, அவரது இரண்டு கால்களும் பாதிப்புற்றிருப்பது தெரிந்திருக்கிறது. அதனால், இப்போது நடப்பது என்பதே ஒரு பெரும் வேதனையான விடயம் அவருக்கு. நாங்கள் ஒரு நிமிடத்தில் நடக்கும் தூரத்திற்கு அவருக்கு ஆகக்குறைந்தது 15-20 நிமிடங்களாவது எடுக்கும். ஒவ்வொரு அடியையும் மிக மெதுவாக எடுக்கவைக்க வேண்டும். எனினும், இவ்வாறு ஆகியதற்கு இப்போது கவலைப்படுவதில்லை எனச் சொல்லும் வாழ்வின் மீதான அளப்பெரும் காதல் கொண்டவர்.

ஏதோ ஒருபேச்சின்போது, கேரளாவில் முதன்முதலில் தமது தாத்தாதான் விதவையான பெண்ணை மறுமணம் செய்துகொண்டவர் என்றும், அதனால் தாம் ஊரிலிருந்து விலக்கப்பட்ட குடும்பம் எனவும் சொன்னார். இப்படிச் செய்ததால் அவரின் பாட்டியும் அவரின் தாத்தாவும் பெரும்பாலானோர்க்குக் கேரளாவில் தெரிந்தவர்கள் என்று அவர்களின் பெயரையும் ஊரையும் சொன்னார்.



கொச்சி



தொடுபுழா

நான்தான் இப்போது அவற்றை மறந்துவிட்டேன். நம்பூதிரிகளான அவருக்கு எப்படி லெவின் என்ற பெயரெனஇன்னொருகேரளநண்பர்ஆச்சரியப்பட்டார். டால்ஸ்டாயின் அன்னா கரீனாவில் வரும் லெவின் பாதிப்பில் வைத்திருக்கலாமென நான் சும்மா நகைச்சுவைக்காகச் சொன்னேன். ஆம், டால்ஸ்டாயை வாசித்த தனது தாத்தாதான் அந்தப் பெயரைத் தனக்கு வைத்தார் என்று லெவின் சொன்னது இன்னொரு வியப்பு.

அவர்தான், கொச்சினில் நல்லதொரு பிரியாணிக் கடை சொல்லுங்கள் என்றபோது, Kayeesஐ கைகாட்டினார். அங்கே எப்போதும் சனம் குழுமிக் கொண்டிருந்தாலும், பிரியாணி தவிர்ந்து வேறு எந்த உணவும் இல்லை என்பது அந்தக் கடையின் சிறப்பு. ரூபாய் 150இற்கு வயிறு நிரம்பச் சாப்பிடுமளவுக்கு மட்டுமல்ல சுவையாகவும் இருந்தது.

'Oru Visheshapetta Biriyani Kissa' என்ற அண்மையில் வந்த மலையாளத் திரைப்படமும் பிரியாணி பற்றியே பேசுகின்றது. கோழிக்கோட்டிலிருக்கும் ஒரு மசூதியில் ஒவ்வொரு ஞாயிறும் ஒரு ஹாஜியார் இலவசமாக பிரியாணி வழங்குகின்றார். ஊரே அந்தப் பிரியாணிக்கு அடிமையாக இருக்கின்றது. ஊர்ப்பெரியவரான ஹாஜியார் தனது காலமான மனைவியின் பெயரில் இதைப் பல வருடங்களாகச் செய்துவருகின்றபோது, 20 வருடங்களுக்கு மேலாக அங்கே பிரியாணி செய்துகொண்டு இருக்கும் ராஜன் என்ற சமையல்காரர்



ginger house

மரணமடைய, தொடர்ந்து பிரியாணி வழங்குவதில் வரும் சிக்கல்களைப் பற்றிப் பேசும் படமிது. சில வெளிப்படையான குறைகள் இதிலிருந்தாலும் சிரித்தபடி பார்க்கலாம். இறுதியில் அந்தப் பிரியாணி வாசந்தான் ஒரு தற்கொலையைத் தடுக்கிறது, ஊர் மக்களைச் சேர்த்து வைக்கின்றது. முதிய / நடுத்தர வயதில் இருக்கும் இருவருக்கிடையில் வரும் காதலை ஊருக்குப் புரிந்துகொள்ளவும் வைக்கின்றது.

கொச்சியில் எழுந்தமானமாக உலாவிக் கொண்டிருந்தபோது Ginger House என்கின்ற மியூசியமும் உணவகமும் சேர்ந்திருந்த இடத்துக்குள் நுழைந்திருந்தேன். மழை பொழிந்துகொண்டிருந்த காலம் என்பதால்சனங்கள்உள்ளே அவ்வளவாகஇருக்கவில்லை. கப்பச்சினோவைப் பார்த்தபடி சொல்லிவிட்டு சாம்பல் பூசிக் கிடந்த கடலைப் பார்த்தபடி இருந்தேன்.

புராதனமான பொருட்களை வைத்து இதை அழகுபடுத்தி இருந்தார்கள். அநேகமான பொருட்கள் மரத்தாலேயே செய்யப்பட்டிருந்தன. பிரமாண்டமான நடராஜர் சிலையை 1900களின் நடுப்பகுதியில் யாரோ ஒரு செட்டியார் கோயம்புத்தூரிலிருந்து கொச்சினிலிருந்த யாருக்கோ கொடுத்ததாக அதனடியில் பொறிக்கப்பட்டிருந்தது. உள்ளே நீண்ட கப்பலும் அழகாகப் பராமரிக்கப்படுகின்றது. மிகுந்த மனோரதியத்தையும் அமைதியையும் தரக்கூடிய இடம்.

கொச்சிக்குப் போகின்றவர்கள் இதைத் தவறவிடக் கூடாது என்றால் எவரும் கேட்கப்போவதில்லை என்பதால், ‘அண்மையில் வந்த செல்வராகவனின் ‘NGK’ படத்தில் ‘அன்பே பேரன்பே’ பாட்டின் தொடக்கக் காட்சிகள் இங்கேதான் எடுக்கப்பட்டிருக்கிறது, உங்கள் காதலிகளுடன் சென்று பாருங்கள்’ என்றால்தான் நம் தமிழ் மனதின் ஆழத்திற்குச் சென்று தைக்கும் என்பதால், அதையும் குறிப்பிட்டு விடுகின்றேன்.

மதுரையிலிருந்த ஆனைமலைக்குப் போவது என்று தீர்மானித்ததே முக்கியமாய் சமணச் சிற்பங்களைப் (மலையில் குடைந்திருக்கும் தீர்த்தங்கரர்களை) பார்ப்பதற்காகவேயாகும். ஆனால், துயரம் என்னவென்றால் நாங்கள் போனபோது அதைப் பார்ப்பதற்குச் செல்லும் வழி பூட்டப்பட்டிருந்தது. சிலவேளைகளில் காலை என்பதால் பூட்டப்பட்டிருக்கலாம், அருகிலிருக்கும் நரசிங்கர் கோயிலை முதலில் பார்த்துவிட்டு வருவோம் என்று போனோம். திருமாலின் உக்கிரவடிவினரான நரசிங்கரைப்பாறையில்வைத்துச்செதுக்கியிருக்கின்றனர். நரசிங்கர் இருப்பது மாதிரி இந்த ஆனைமலையில் இன்னும் நிறைய குடகுக்கோயில்கள் இருப்பதாகவும் அதில் பெரும்பாலானவை சிவனுக்குரியவை என்றும் எங்கையோ வாசித்ததாக நினைவு. சைவமும் சமணமும் தளைத்தோங்கிய ஓரிடத்தில், வைஷ்ணவம் முக்கியமான அடையாளமாக இன்றைய காலத்தில் தன்னை நிலைநிறுத்தியிருப்பதன் வரலாற்றை, மதுரையை முன்வைத்து வாசிப்பதுகூட ஒருவகையில் சுவாரசியமாக இருக்கக்கூடும்.

நரசிங்கரைப் பார்த்துவிட்டு வரும்போதும் சமணர் சிற்பங்களைப் பார்க்கும் வழி பூட்டப்பட்டிருந்தது. அருகிலிருந்தவர்களிடம் இது எப்போது திறக்கும் என்று விசாரித்தபோது, யாரோ ஒருவரிடம் திறப்பு இருக்கிறது, அவர் வந்தால்தான் திறப்பார் எனச் சொன்னார்கள். எங்களைக்கூட்டி வந்த வாகன சாரதி, சரி கள்ளழகர் கோயிலைப் பார்த்துவிட்டு திரும்பவும் மாட்டுத்தாவணிக்குப் போகும்போது பார்க்கலாம் என்றார். கள்ளழகரையும் பழமுதிர்ச்சோலை முருகனையும் பார்த்துவிட்டுத்






David Hall Art Cafe

திரும்பியபோதும் அது பூட்டப்பட்டிருந்தது. எனக்கு வந்த ஏமாற்றத்தில், நான் அந்தச் சாரதி அண்ணாவிடம், படலை ஏறித் தாண்டிப் போய்ப் பார்க்கட்டா எனக் கேட்டேன் (படலை தாண்டினாலும் ஒரு அரைமணித்தியாலம் மேலே ஏறினால்தான் அந்தச் சிற்பங்கள் வரும்). இறுதிவரை அங்கிருந்த மகாவீரரையோ, பார்சுவ நாதரையோ, அம்பிகாவையோ பார்க்க முடியாது போனதில் கவலையாகவே இருந்தது.

அதுபோலவே திருமலைநாயக்கர் மஹாலைப் பற்றி வாசித்தும், திரைப்படங்களில் பார்த்தும் மிகப்பெரும் கனவுகளுடன் அங்கே போயிருந்தேன். ஓரளவு கவனமாகப் பராமரித்தாலும் முதன்மை மண்டபத்தில் புறாக்களின் அட்டகாசத்தால் எந்த இடத்திலும் கால் வைக்கமுடியாது இருந்தது. இத்தனைக்கும் அங்கே துப்பரவு தொழிலாளர்கள் அடிக்கடி அதைச் சுத்தப்படுத்தியபடியே இருந்தார்கள். வெளியில் நிறையச் சிலைகள் உடைந்த/உடைக்கப்பட்ட நிலையில் வெயிலில்








வாடிக்கொண்டிருக்கையில் நமக்குப் புராதனங்கள் மீது எவ்வளவு 'அக்கறை' என்பது விளங்கியது. உள்ளே யிருந்த ஒரு மண்டபம் மட்டுமே அருமையாகப் பராமரிக்கப்பட்டுக் கொண்டிருந்தது.

சென்னைக்கு வந்து நின்றபோது, தங்கி நின்ற விடுதியில் அருகில் இருக்கும் இடங்களைப் பார்க்க, நடந்துபோயிருந்தேன். அப்படி உலாப்போனபோது ஏதாவது சுவாரசியமான இடம் இருக்கா என்று தேடியபோது 10 downing street pub இருப்பதாய் கூகிள் ஐயா கூறினார். அட இது நமது சாரு அடிக்கடி போகும் இடமாயிற்றே, அங்கே அவரைச் சந்திக்க முடியாவிட்டால் கூட, நாயோடு நடையுலா வரும் த்ரிஷாவையாவது தற்செயலாகச் சந்திக்கலாம் என்ற பேராசையுடன் வெயிலையும் பொருட்படுத்தாமல் போனேன். துயரம் என்னவென்றால் அந்த இடத்தைச் சுற்று சுற்றிப் பார்த்தபோதும் அது எங்கையோ மறைந்து போயிருந்தது. அருகிலிருந்த மசூதியை, அப்படியே அதற்கருகில் இருந்த தெருக்களில் தொலைந்து குறுகிய 'சந்து'களுக்குள்ளால் போய் ஒரு சிறுதெய்வக் கோயிலை எல்லாம் பார்த்தேன். ஆனால், 10 downing pub மட்டும் drowning ஆகிவிட்டது.

பிறகு திரும்பும் வழியில் 'தானியம்' இயற்கை அங்காடியைக் கண்ட மகிழ்ச்சியில் உள்ளே போய்ப் பார்த்தபோதுதான்,இந்த'கருப்பட்டி கடலை மிட்டயை'ப் பார்த்தேன். இதை அறிமுகப்படுத்திய ஸ்டாலினையும் (குக்கூ ஊடாகவோ அல்லது ஜெயமோகனின் தளத்தின் ஊடாகவோ, எதுவென மறந்துவிட்டேன்), அவர் தன் பொறியியல் தொழிலை விட்டுவிட்டு தனக்குப் பிடித்த விடயமான பனங்கருப்பட்டித் தயாரிப்புக்குத் திரும்பியதையும் வாசித்திருந்தேன்.

வாழ்விலும் (முகநூலிலும்) நிறைய எதிர்மறைகளைப் பார்த்தது, இப்போது அவற்றை இயன்றவரை விலத்தி வரப் பிரயத்தனம் செய்பவன் என்றவகையில், ஸ்டாலின் போன்றவர்களும் நேர்மறையாக வாழ்வைத் தரிசிக்க விரும்பும் அவர்களின் விடாமுயற்சிகளும் வசீகரிக்கின்றன. ●

**இளங்கோ <elanko@rogers.com>**

< தொடர் >

# இதயத்தின் ஆழத்தில் ஆசை

## மார்டின் பட்லர்
## தமிழில்: ஷங்கர்ராமசுப்ரமணியன்

போர்ச்சுகீசிய நாட்டில் வசிக்கும் மார்டின் பட்லர், சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த ரஷ்ய மெய்ஞானியான குர்ட்ஜிப் அவர்களின் நேரடி மாணவியான ரீனா ஹேண்ட்சின் உதவியுடன், ஆன்மப் பயிற்சிகளில் பல்லாண்டு காலம் ஈடுபட்டவர். மனித நிலைமைகள் பற்றிய ஆழமான புரிதலுக்கு இவர் வருவதற்கு ஸ்பினோஷா போன்ற தத்துவவாதிகளையும் முறையாகக் கற்றிருக்கிறார். என் காலத்தையும் என்னைச் சுற்றியுள்ள நிலைமைகளையும் புரிந்துகொள்வதற்கும் இந்தச் சூழ்நிலைகளுக்குள் எனது விழைவுகள், ஆசைகள், வலிகள் ஆகியவற்றைக் குறைத்துக்கொள்வதற்கும், எனக்கு வழங்கப்பட்டுள்ள வளங்களினூடாக நிறைவாகவும் நீதியாகவும் இருப்பதற்கும், மார்டின் பட்லரின் எழுத்துகள் உதவிகரமாக இருக்கின்றன. மார்டின் பட்லர் என்னிடம் ஏற்படுத்திய பயன்விளைவை இன்னும் சில வாசகர்களும் அடையலாம் என்ற நம்பிக்கையில், எனக்குப் பிடித்தவற்றை மொழிபெயர்க்கிறேன்.

இதயத்தின் ஆழத்தில் நீங்களும் நானும் ஆசையே. அப்படித்தான் ஸ்பினோசாவும் ஷோபன்ஹெரும் புத்தரும் சொல்கிறார்கள். இது உண்மைதான் என்று தெரிந்துகொள்வதற்கு நம் மனத்தில் நடப்பது குறித்த சின்ன கவனிப்பே போதுமானது. ஆசைகள் வந்து வந்து போவதை உட்கார்ந்து கவனித்துப் பார்த்தால், ஒன்றைப் பற்றி ஒன்றாக அவை முடிவில்லாமல் பெருகுவது தெரியவரும்.

ஆசையைப் பொருத்தளவில் ஷோபன்ஹெருடைய அணுகுமுறைக்கு ஸ்பினோசாவின் அணுகுமுறை முற்றிலும் வேறு என்றாலும் ஆராயத் தக்கதே. மனிதனின் சாராம்சம் ஆசைதான் என்கிறார் ஸ்பினோசா. இருத்தலைத் தொடர்வதற்கான ஆசையை முக்கியமென்கிறார். ஒவ்வொரு உயிரும் தன்னிடமுள்ள அதிகாரத்தை அனுசரிக்கும், 'இறையாண்மைமிக்க இயற்கை உரிமை'யைப் பெற்றுள்ளதாக அவர் சொல்கிறார். வலிமையானது பலவீனமானதன் மீது ஆதிக்கம் செலுத்தவும் சுரண்டவும் செய்யுமென்று கூறும் அவர், அதில் எந்தத் தவறையும் காணவில்லை. இயற்கை ஒவ்வொரு உயிரையும் அப்படித்தான் படைத்திருக்கிறது, நாம் படைத்துக் கொள்ளவில்லை. இந்த இருப்பு ஆற்றலை அவர் கடவுளுடன் இணைவைக்கிறார். பலசாலிகள், பலவீனர்களை ஆதிக்கம் செய்வது கடவுளால் அளிக்கப்பட்ட நடத்தையெனக் கருதுகிறார்.

இருப்புக்கான அதிகாரத்தை நற்பண்போடு இணைவைக்கிறார் ஸ்பினோசா. இருப்பினும் இந்தத் தோட்டத்தில் எல்லாமே நறுமணமுடையவை அல்ல.

நாம் விரும்புவதை நம்மால் எப்போதும் பெற முடியாததால் நாம் துயரப்படுகிறோம். எல்லாருக்கும் எல்லாம் கிடைக்கும் வாழ்க்கையாக இது இல்லை. அல்லது விலங்குகளைப் போலத் துயரப்பட்டிருப்போம். அதனால், ஒரு ஒழுங்கு நிலவும் சமூகத்துக்காக நமது அதிகாரத்தை கொஞ்சூண்டு இழக்கிறோம். இருக்கும் நிலைமையை உள்ளது உள்ளவாறு, எந்தத் தயக்கமும் மதிப்பீட்டு தீர்ப்புகளும் இன்றி ஸ்பினோசா இதைச் சொல்கிறார். இப்படித்தான் விஷயங்கள் உள்ளன. அதனாலேயே சிறிதளவே துயர்படும் அளவுக்கு நமது வாழ்க்கையை ஓரளவு சீராக ஒழுங்கமைத்திருக்கிறோம்.

ஷோபன்ஹெரோ முழுமையாக வித்தியாசமான ஒரு அணுகுமுறையை எடுக்கிறார். அவர் கீழைத்தேய சமயங்களால், குறிப்பாக பௌத்தத்தால் அழுத்தமான தாக்கத்துக்குள்ளானவர். அதனால், அவரது அணுகுமுறை இப்படியாக இருக்கிறது.

கால, வெளியில் ஆசையால் அவதரித்த உடல்கள் நம்முடையவை. எல்லா வஸ்துக்களிலும் இந்த ஆசையே உள்ளது. இதையே அவர் வாழ்க்கைக்கான விருப்பு என்றார். குருட்டுத்தனமான, பிரக்ஞை பெற இயலாத இந்த சக்திதான் ஒவ்வொரு உயிரையும் இந்தப் பிரபஞ்சத்தின் மையமாகத் தன்னைப் பார்க்கச் செய்கிறது. இருப்பதற்காக உயிர்கள் பிற உயிர்களின் மீது துயரத்தை ஏவிவிடவும் வேண்டியிருக்கிறது. பிற உயிர்களைச் சாப்பிட வேண்டியிருக்கிறது; சுரண்ட வேண்டியிருக்கிறது; ஆதிக்கம் செலுத்துவதற்கும் புணர்ச்சி உரிமைக்கும் சண்டையிடுகிறது.

ஷோபன்ஹெர், இந்த விஷயம் முழுவதையும் பரிதாபத்துக்குரியதாகப் பார்க்கிறார். இந்த உந்துதலுக்கு ஆட்பட்ட எந்த உயிரும் துயரப்படுவதோடு மற்ற உயிர்களையும் துயரத்துக்குள்ளாக்கும் என்கிறார்.

இப்படித்தான் அவரது தலைசிறந்த நூலான 'தி வேர்ல்ட் அஸ் வில் அண்ட் ரெப்ரசண்டேஷன்'இல் வாழ்வுக்கான விருப்பை மறுப்பதற்குப் பரிந்துரைக்கிறார். வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டுமானால், நம்மில் உள்ள ஏதோவொன்று அந்தக் குருட்டுத்தனமான உந்துதலைப் பார்த்துக்கொண்டு அதற்கு முதுகு திருப்பிக் கொள்கிறது. கிறித்துவ சமயத்தில் சொல்லப்படும் துறவுக்கு ஒப்பானது இது. பெரும்பாலான சமயங்களில் இதுபோன்ற வடிவங்கள் இருக்கவே செய்கின்றன. ஆனாலும், தனிப்பட்ட மனிதர்களால் அரிதாகவே கடைபிடிக்க முடியக்கூடிய விஷயம் இது. ஞானியரும் துறவியரும் வேண்டுமானால் வாழ்வுக்கான விருப்புக்கு பாராமுகம் காட்டியிருக்கலாம்.

ஷோபன்ஹர், ஸ்பினோசா இருவரது அணுகுமுறைகளும் அதற்குரிய பலன்களைக் கொண்டவை. ஸ்பினோசா, எத்தனை சாத்தியமோ அத்துணையளவு நமது அதிகாரத்தை அனுசரிக்கலாம் என்கிறார். நாம் விரும்புவதைப் பெறுவது எப்போதும் சாத்தியமல்ல என்ற உண்மையையும் நாம் தாங்கிக்கொள்ளவே வேண்டும்.

அனைத்து ஆசைகளிலிருந்தும் விடுதலை தேடுவதன் வாயிலாக நிராகரிக்கப்படுவதின் வலியை நேரடியாக எதிர்கொள்கிறோம் என்கிறார். இரண்டு அணுகுமுறைகளிலும் எனக்குப் பயனுள்ளதை நான் எடுத்துக்கொள்வேன். ஷோபன்ஹெர் நமக்கு முன்னால் சூழ்நிலையின் பயங்கரத்தை எடுத்துக்காட்டி உணர்வுரீதியான கோணத்தைத் தருகிறார். ஆசைகளை அனுசரிப்பதற்கான பகுத்தறிவுப் பூர்வமான அணுகுமுறைகளை ஸ்பினோசா வழங்குகிறார்.

சுருக்கமாகச் சொன்னால், ஸ்பினோசா ஆசையை ஏற்புக்குரியதாகவும் அதன் இயல்பிலேயே அதை அணுகவும் செய்கிறார். ஷோபன்ஹெரோ ஆசையை குருட்டுத்தன்மை கொண்டதாகவும் இரக்கமற்றதாகவும் பார்க்கிறார். அத்தோடு சாத்தியமென்றால் அதைப் புறக்கணிக்க வேண்டியதாகவும் பார்க்கிறார். ●

ஷங்கர்ராமசுப்பிரமணியன் <shankarashankara@gmail.com>

## கிரிஸ் கர்னாட்
## (1938 - 2019)

# மறுமலர்ச்சி நாயகன்

**எஸ். நந்தகுமார்**

**தமிழில் : மு.இசக்கியப்பன்**

சுமார் பதினான்கு வருடங்களுக்கு முன்பு ஒரு பள்ளியின் விழாவில் கலந்துகொள்வதற்காக கிரிஷ் கர்னாட்டை நாங்கள் அழைத்தோம். அப்போது அவர், "எனக்கு இப்போது 67 வயதாகிறது. நீங்கள் நடத்தும் பள்ளியின் மீது எனக்கு மிகுந்த மரியாதை உள்ளது. இருப்பினும், எனக்கு எழுதுவதற்கான பணிகள் நிறைய உள்ளது. அங்கு வருவதாக இருந்தால் 3 நாட்கள் வீணாகக் கழிந்துவிடும்" என்று தன்னால் வர இயலாததை வருத்தத்துடன் பகிர்ந்துகொண்டார். தான் நம்புகின்ற கலை மீதான அவரது ஆத்மார்த்தமான ஈடுபாடு எம்மை நெகிழச் செய்தது.

இந்த அர்ப்பணிப்பு உணர்வுதான் நாடக ஆசிரியராக, எழுத்தாளராக, திரைப்பட இயக்குநராக, நடிகராக.. கலையின் பன்முகத் தன்மையில் அவரை நெடுங்காலம் பரிணமிக்கச் செய்தது. தடம் பதித்த அத்தனை துறைகளிலும் தன் முத்திரையை நேர்த்தியாக பதிவு செய்ய முடிந்தது.

உயர்கல்விகற்கத்தனது குடும்பத்தின் பொருளாதார சூழல் இடம் தராதபோது, கல்வி உதவித்தொகையைப் பெறும் முயற்சியிலும் கிரிஷ் கர்னாட் ஈடுபட்டார். தார்வாடு கர்நாடகா கலைக் கல்லூரியில் பி.ஏ. கணிதத்தைத் தேர்ந்தெடுத்து, பயின்று, அதில் முதல் வகுப்பில் தேர்ச்சியும் பெற்றார்.

ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தின் உதவித்தொகையைப் பெறுவதற்காகவே கணிதத்தை இவர் விருப்பமின்றி தேர்ந்தெடுக்க நேரிட்டது. பின்னர் லண்டனில் 'ரோட்ஸ் உதவித்தொகையை' பெற்று முதுகலைப் பிரிவில் தத்துவம், அரசியல், பொருளாதாரம் போன்ற துறைகளில் தேர்ச்சி பெற்றார்.

ஆங்கில இலக்கிய உலகில், தனக்கென தனி முத்திரையை பதிக்க விரும்பினாலும் பெரும்பாலும் கிரிஷ் கர்னாட் தனது கன்னட நாடகப் படைப்புகளுக்காகவே இன்றுவரை பரவலாக அறியப்படுகிறார். இருப்பினும், இந்திய கலாச்சார வரலாற்றில் அவர் இயக்கிய சில திரைப்படங்களும் அழியாத் தடங்களை உருவாக்கியுள்ளது. இவரை பற்றி, கே.எம். சைதன்யா இயக்கிய ஆவணப்படம் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

புகழ்பெற்ற நாவலாசிரியர் எஸ்.எல். பைரப்பாவின் நாவலைத்தழுவி, பி.வி. காரந்துடன் இணைந்து 1971இல் 'வம்ச விருக்ஷா' என்ற தனது முதல் கன்னட படத்தை இயக்கினார். இப்படம் சிறந்த இயக்குநருக்கான தேசிய விருதையும் பெற்றது. அகிரா குரோசாவின் சாமுராய் படங்களின் பாதிப்பால் உத்வேகம் பெற்று, இவர் இயக்கிய 'Ondanondu Kaladalli' (முன்னொரு காலத்தில்) என்ற 1978இல் வெளியான திரைப்படம், கன்னட திரைத்துறையின் சிறந்த செவ்வியல் திரைப்பட முன்னோடியாக இன்றுவரை போற்றப்படுகிறது.

காலஞ்சென்ற புகழ்பெற்ற நடிகர் 'சங்கர் நாக்' இப்படத்தின் மூலம் நடிகராக அறிமுகமானார். 'காடு' (1973), பி.வி. காரந்துடன் இணைந்து இயக்கிய 'தப்பலியூ நீனாடு மகனே' (1977), 'கன்னூரு ஹெக்கடத்தி' (1999), இந்தியில் வெளியான 'உத்சவ்' (1984) போன்றவை இவரது இயக்கத்தில் வெளியான சிறந்த படங்களாகும்.

சுத்ரகா என்பவரால் இரண்டாம் நூற்றாண்டில் புனையப்பட்ட பழம்பெரும் சமஸ்கிருத நாடகமான 'மிருச்ச கடிகாவைத்' தழுவி இந்தியில் 'உத்சவ்' திரைப்படத்தை நவீன காலத்திற்கேற்றார் போல் உருவாக்கினார். யு.ஆர். அனந்தமூர்த்தியின் நாவலைத் தழுவி வெளியான 'சமஸ்காரா' (1970) திரைப்படம் மூலம் முதன்முதலாக நடிகராகவும் அறிமுகமானார். இவர்களிருவருமே, கன்னட இலக்கியத்திற்கான ஞானபீட பரிசை பெற்றவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. சமஸ்காராவின் வெற்றியைத் தொடர்ந்து தமிழ், இந்தி, கன்னடம், தெலுங்கு போன்ற பிற மொழிப் பாடங்களிலும் நடிக்கத் தொடங்கினார்.

தனது 23ஆம் வயதில், 1961இல் 'யயாதி' என்ற முதல் நாடகத்தை கிரிஷ் கர்னாட் எழுதினார். இதன் உடனடி வெற்றியைத் தொடர்ந்து 1964இல் அவர் எழுதிய 'துக்ளக்' நாடகம் இந்திய நாடக உலகில் பெரும் அதிர்வுகளை ஏற்படுத்தியது. இப்ராகிம் அல்காசி போன்ற இயக்குநர்கள் இந்நாடகத்தை டெல்லியில் தொடர்ந்து பலமுறை இந்தியில் அரங்கேற்றினர்.

இந்திய இலக்கியம், நாடகத் துறையின் சிறந்த பேராசிரியராகக் கருதப்படும் கே. மருளசித்தய்யா இதுபற்றி கூறும்போது, "1970களில் கன்னட நாடக உலகில் புதிய அலையை ஏற்படுத்தியதாகவும் பல்வேறு நவீன நாடகங்கள், பரிசோதனை முயற்சிகளுக்கு வித்திட்டதாகவும்" குறிப்பிடுகிறார். மேலும் 'துக்ளக்' நாடகத்தில், அதுவரை நாடக உலகில் இடம்பெறாத நவீனத்துவமான ஷேக்ஸ்பியரிய அம்சமாகக் கருதப்படும், காவிய துன்பவியல் மரபின் நீட்சியைக் காணமுடிகிறது என்றும், பின்னாட்களில் பலரும் இதே பாணியை பின்பற்றத தொடங்கினார்கள் என்றும், பேராசிரியர் கூறுகிறார். துக்ளக்கின் வெற்றியை மையமாக வைத்து பெங்களூர் பல்கலைக் கழகம் எழுபதுகளில் 'கன்னட நாடக மரபுகளும் புதிய



போக்குகளும்; என்ற தலைப்பிலான கருத்தரங்கை நடத்தியது.

இதையொட்டி பெங்களூர் ரவீந்திர கலாசேத்ராவில் நவீன நாடக விழாவும் நடைபெற்றது. பி.லங்கேஸ் எழுதிய 'சங்கராந்தி', சந்திரசேகர கம்பர் எழுதிய 'ஜோகுமார சுவாமி', லங்கேஸ் மொழிபெயர்த்த 'ஈடிபஸ் ராஜா' போன்ற பி.வி. காரந்தால் இயக்கப்பட்ட 3 நாடகங்கள் இவ்விழாவில் அரங்கேறின. கிரிஸ்கர்னாட்டும் இந்நாடகங்களில் நடித்துள்ளார்.

இந்திய வரலாறு, தொன்மங்களை நவீன வாழ்க்கைச் சூழலுக்கு ஏற்றார்போல் வடிவமைத்ததில் இவரது படைப்புகள் பெரும் பங்காற்றியுள்ளன. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சமூக சீர்த்திருத்தக் கவியாகப் போற்றப்பட்ட கன்னடக் கவிஞர் பாசவன்னா எழுதிய 'வசன சாளுவழி'யை தனது நாடகத்தில் முற்றிலும் புதிய கோணத்தில் அணுகினார்.

தொண்ணூறுகளில் பாபர் மசூதி, மண்டல் கமிசன் போராட்டங்கள் உச்சத்திலிருந்த போது கிரிஷ் கர்னாட் எழுதிய 'தலதந்தா' (தலை துண்டிக்கப்படுதல்), இந்தியில் 'ரகத்கல்யாண்' நாடகம் இதிகாச புராண மரபுகளை கேள்விக்குட்படுத்தியது. 1994இல் இதற்காகக் கர்நாடக சாகித்திய அகாடமி விருதையும் பெற்றார்.

ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடி தோல்வியைத் தழுவிய திப்பு சுல்தானின் வாழ்வை மையப்படுத்திய 'திப்பு சுல்தான் கண்ட கனவு' நாடகம் இந்திய வரலாற்றில் ஒரு மைல்கல். முப்பது வருட இடைவெளிக்குப் பிறகு சைதன்யாவுடன் இணைந்து இவர் எழுதிய 'ஒடகலு பிம்பா' என்ற நாடகம் ஒரு எழுத்தாளரின் இருவேறு மனநிலைகளை புதிய உத்தியில் காட்சிப்படுத்தியது. ஒருவர், தன் எதிரே தொலைக்காட்சி முன் தோன்றும் தனது பிம்பத்துடன் உரையாடுவது போல், தனிநபர் நடிப்பாக இந்நாடகம் வடிவமைக்கப்பட்டிருந்தது. பெரும்பாலும் இவரது நாடகங்களுக்கான தலைப்புகளை நம்மை வசீகரிக்கச் செய்துவிடும்.

விஜய நகரப் பேரரசிற்கும் டெக்கான் சுல்தான்களுக்கும் இடையே நடந்த தலைக்கோப்பைப் போரை முன்வைத்து 2018இல் இவர் எழுதிய 'ராக்சஷ தங்காடி' என்ற வரலாற்று நாடகம் நவீன இந்திய அரசியலை பேசியது. இது அவரது கற்பனைக்கு சிறந்த சான்றாகும்.

எப்போதும் ஒருவித தேடலிலிருந்த கிரிஷ் கர்னாட் தன் மனதில் பட்டதை எவ்வித ஒளிவு மறைவுமின்றி வெளிப்படையாகப் பேசுவார். நடிகர்களிடம் தனது கருத்துக்களைத் திறந்த மனதுடன் பகிர்ந்தவாறே படைப்பின் புதிய வெளிகளைக் கண்டடைந்து கொண்டேயிருந்தார்.

பூனா திரைப்பட கல்லூரியில் முதல்வராகவும் (1974-75), லண்டனிலுள்ள நேரு கலாசேத்ரா மையத்தில் (2000-2003) இயக்குநராகவும் கிரிஷ் கர்னாட் பணியாற்றியது, அவருடைய சிறந்த நிர்வாகத் திறமைக்கு சான்றாகும். எனக்குத் தெரிந்து கடைசியாக கிரிஷ் கர்னாட் தனது சுயசரிதையை எழுதிக் கொண்டிருந்தார்.

அவர் விரும்பியவாறே எவ்வித அரசு மரியாதையுமின்றி, ஆர்ப்பாட்டமின்றி, நண்பர்கள் சூழ அமைதியாக அவரது இறுதி யாத்திரை நடந்தது. அவருடைய எல்லா நாடகங்களின் இறுதிக் காட்சியில் இயல்பாக நிலவும் மௌனத்தைப் போலவே கானாப்பள்ளி மின் மயானத்திலும் அன்று பேரமைதி நிலவியது. ●

நன்றி: டெக்கான் ஹெரால்டு

**இசக்கியப்பன் <isaineri@gmail.com>**

# தென் துருவத் தேவதை

யோகன்

வரிசையாக அடுக்கிக்கிடந்த பத்து பதினைந்து வட்ட மேசைகளை சுற்றி இருந்து சீட்டாடிக்கொண்டே சாப்பிட்டுக் கொண்டிருப்பவர்கள் பலர் மத்தியில், தான் தனியாக ஒரு மேசையிலிருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தது, கதிருக்கு சங்கடமாகத்தானிருந்தது. எல்லாருமே பேசிக்கொண்டே சாப்பிடுகிறார்கள். ஆனால், அவனுக்கு பேசிக்கொண்டு சாப்பிடும் பழக்கம் இல்லை. பேசிக்கொண்டு சாப்பிட்டால் அது சாப்பாட்டின் ருசியையே மறைத்துவிடும் என்று நினைப்பவன் கதிர். வாய்க்கு ஒரேநேரத்தில் இரண்டு வேலை கொடுப்பதில் அவனுக்கு விருப்பமில்லை என்பது இன்னொரு காரணம். புரையேறிவிடும் என்று சிறுவயதிலிருந்தே தொடரும் பயம் வேறு.



அவனுடன் அமர்ந்திருந்து கதைப்பதற்கும் அந்தமதியஉணவவறையில்யாரும்துணியவில்லை. அவர்களை புரிந்துக்கொண்டு அவர்களுடன் கலந்துகொள்ளுமளவுக்கு, அவர்கள் பேசி சிரிக்கும் பல விடயங்கள் அவனுக்கு இன்னும் புரியவும் தொடங்கவில்லை. தான் இந்த நாட்டுக்கு புதிதாக புகலிடம் தேடி வந்தவன் என்பதையும் அவன் இன்னும் எவருக்கும் சொல்லவில்லை.

பொதுவாகவே ஒதுங்கிப் போகிறவர்களை கண்டுகொள்ளாமல் விட்டுவிடுவது இவ்வூரின் வழக்கம். அது அவரவர் 'பிரைவசி' என்று யாரும் தலை யிடுவதில்லை.கதிரின்பிரச்சினைஆங்கிலம்புரியாததால் வந்த தயக்கமும் தாழ்வுணர்வும்தான். அதை அவன் வெல்ல முயற்சிப்பதற்குப் பதிலாக முட்டாள்தனமாக ஒரு மௌனச் சுவரை தன்னைச் சுற்றி எழுப்பிக்கொண்டு வருவதை முதலில் கண்டறிந்தவள் மிச்செல்தான்.

ஒரு மதிய இடைவேளையில் கன்டீனில் கதிர் தலையை குனிந்தபடியே, பிளேட்டை முகம் முட்டுமளவு குனிந்து, சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் அங்கு வந்த மிச்சேல் அவனை பார்த்து சிரிக்க, "ஏன்" என்று கேட்டான்.

"சாப்பிட்டு முடித்துவிட்டு பிளேட்டுக்கு முத்தம் கொடு" என்று அவனை கிண்டல் பண்ணிக்கொண்டே எதிரில் அமர்ந்தாள். அந்தளவுக்கு பிளேட்டுக்குக் கிட்ட அவன் முகம் இருந்தது.

"இங்கே ஒவ்வொருவரும் தங்களை சுற்றி சுவர்களை எழுப்பி வைத்திருக்கிறார்கள்."

சொன்னது புரியாமல் அவளைப் பார்த்தான்.

"இப்போ பார். என் அயல் வீட்டுக்காரரின் பெயர்களேஎனக்குதெரியாது.ஒருநாள்நானாகவேதான் போய் அறிமுகப்படுத்திக்கொண்டேன். பிறகுகூட அவர்கள் பழகுவதில் ஆர்வம் காட்டவில்லை. வெறும் 'ஹாய்', 'குடே', 'மோர்னிங்' என்கின்ற மாத்திரத்தில் நிறுத்திக்கொண்டார்கள். பிறகு வீட்டைவிட்டுப் போன பல நாட்களின் பின்னர்தான் தெரிந்தது, அவர்கள் அங்கிருந்து போய் விட்டார்களென்பது."

"சராசரியாக 40 வீதமான ஆஸ்திரேலியர்களுக்கு தங்களது அயலார் யாரென்றே தெரியாது. சிலர் பெரும் கோட்டைக்குள்ளேயே வாழ்கிறார்கள். உள்ளே நுழையவே முடியாது."

அவளே தொடர்ந்து பேசிக்கொண்டிருந்தபோதும் கூட கதிர் சாப்பாட்டில் கவனமாக இருந்தான்.

கதிர்ராஜன் என்ற பெயரை குறுக்காக, இரு பாதியாக அறுத்து, 'கதிர்' என்று சுருக்கியிருந்தபோதிலும் ஆரம்பத்தில் 'காதிர்' என்றுதான் அவனை நீட்டிக் கூப்பிட்டுக் கொண்டிருந்தாள் மிச்செல். அவளை இடைநிறுத்தி திருத்தி 'கதிர்' என்று குறில் ஒலிக்க வைத்த போதிலும் பலருக்கு அவன் இன்னும் காதிர்தான்.

மிச்செலுடன் பழகத் தொடங்கிய சில நாட்களின் பின் ஒரு நாள் மிச்செலுக்கு மலை ஏறுவதில் ஆர்வம் அதிகம் என்பதை கதிர் அறிந்துகொண்டான். எப்படியும் வார விடுமுறையில் ஒரு மலையிலாவது தவறாது ஏறி விடுவாளாம்.

ஒருநாள் மிச்சேல், டகர்நோங் பள்ளத்தாக்கை சுற்றியுள்ள மலைகளின் பெயர்ப் பட்டியல் ஒன்றை கொண்டுவந்து அவனுக்கு காட்டினாள். அவற்றுள் ஏறக்கூடிய பாதைகள் உள்ள மலைகளை அவள் குறித்துத் தந்திருந்தாள். அவள் காண்பித்தபடி அவளோடு சென்று ஓரிரு மலைகளில் ஏறியபின் கதிருக்கும் மலையேறுவதில் ஆர்வம் வந்துவிட்டது. வெறும் உடற்பயிற்சிக்காகவோ அல்லது மலைஉச்சியில் நின்று பார்க்கையில் தெரியும் விரிந்த காட்சிகளுக்காகவோ இல்லாமல், மண்டிக் கிடக்கும் மனித மனதின் உளைச்சல்களை எல்லாம் மலை உச்சியில் போய் நின்று இலேசாக்கிக்கொள்வதற்கும் எல்லா தளைகளிலிருந்தும் விடுபட்டு மிதப்பதுபோன்ற புதியதொரு உணர்வைப் பெற்றுக்கொள்வதற்கும், மலையேறுதல் கதிருக்கு மிகவும் பிடித்துப்போனது.



மலை உச்சியில் எப்போதும் வீசும் காற்று, ஏறிய களைப்பின் வியர்வையை ஆற்றி உடலை குளிர வைக்கும். அவன் அங்குள்ள ஒரு கல்லில் அமர்ந்து கழுத்தில் தொங்கும் பைனாகுலரை எடுக்காமலேயே, அதுதானே ஆஸ்பத்திரி கட்டடம்? இதுதானே மாதா கோயில் கோபுரம் என்று குத்துமதிப்பாக முடிவு செய்துவிட்டுப் பிறகு பைனாகுலரின் மூலம் சரி பார்ப்பான். அது கதிரின் ஒரு பொழுதுபோக்காகிவிட்டது.

வீட்டுக்கு வந்து முதல் வேலையாக ஏறிய மலைகளின் பெயரையும் உயரத்தையும் ஏறிய திகதியையும், அவற்றைவிடமலைஅடிவாரத்துக்குசெல்லும்பாதையின் விவரங்கள், ஏறி - இறங்க எடுத்த நேரம் எல்லாவற்றையும் டயரியில் குறித்து வைத்துக்கொள்வான்.

ஆஸ்திரெலியாவுக்கு வந்த ஆரம்பத்தில் பெண்களை கழுத்துக்கு மேலேயும் முழங்காலுக்கு கீழேயும் மட்டுமே பார்த்துப் பேசிப் பழக்கப்பட்டிருந்த கதிர், மிச்செலின் பழக்கத்திற்குப் பின்பு கொஞ்சம் கொஞ் சமாக சகஜ நிலைக்கு வரத்தொடங்கியிருந்தான்.

அன்டார்டிக்காவிலுள்ள அமெரிக்க ஆய்வு நிலையமொன்றில் பணிபுரிந்து கொண்டிருந்த தன் தந்தையைப் பற்றியும், தன் தாய் ஒரு கோடையில் அவரை பார்க்கப் போனபோதே அங்கே சடுதியாகப் பிரசவ

வலி ஏற்பட்டு எதிர்பாரா விதமாய் தான் அங்கே உறை பனிக்குளிரில் பிறந்ததையும், மிச்செல் சொன்னாள்.

"இங்கே பார்" என்று கையைக் காட்டி, "எவ்வளவு வெள்ளையாக இருக்கிறேன்! பனிக்குள் பிறந்த ஒரு தென் துருவத் தேவதை நான்" என்று ஒருநாள் சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"ஜேம்ஸிலும் பார்க்க நான் வெள்ளை. பனியின் வெள்ளை."

ஜேம்ஸ் அவளின் போய் பிரெண்ட் என்று அன்றுதான் கதிருக்கு தெரிந்தது.

"ஜேம்ஸ் உன்னுடன் மலையேற வருவதில்லையா?" என்று கேட்டதற்கு, "அவனுக்கெங்கே இதற்கெல்லாம் நேரம்? நண்பர்களுடன் போய் கூத்தடித்து வருவதில்தான் அவன்நேரம்போகிறது.ஜேம்ஸ்ஒருசோம்பேறி.உன்னைப் போல கடும் வேலைகள் செய்து பழக்கப்படாதவன்" என்றாள்.

கதிர் அந்த பக்டரியில் வேலைக்கு விண்ணபிக்கும்போதேதான் பாரம் தூக்கும் வேலைகள் செய்து பழக்கப்பட்டவன் என்றும், அத்துடன் சலவை சோப்பு தயாரிக்கும் பக்டரியொன்றில் வேலை செய்த முன்னனுபவம் தனக்கு உண்டென்றும், இரண்டு பொய்களை சொல்லியிருந்தான். ஊருக்கு போன் பண்ணி கேட்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையிருந்தது.

குப்பை அள்ளும் வேலை என்றாலும் நேர்முகத்தேர்வு இல்லாமல் இங்கே கிடைக்காது என்பது அவனுக்கு தெரியாது. இந்த வேலைக்கு விண்ணப்பித்தபோதும்கூட நேர்முகத் தேர்வுக்கு போவதற்கு அவனிடம் கார் இருக்கவில்லை. சைக்கிளில் போய் பக்டரியின் படலைக்கு பக்கத்தில் அதைப்பூட்டி வைத்துவிட்டு காத்திருந்தான். அங்கிருந்து பார்த்தால் கிட்டத்தட்ட இருநூறு மீற்றருக்கப்பால், மஞ்சள் நிறத்தில் தகரச் சுவரும் கூரையும் கொண்ட நான்கு பெரிய கட்டடங்கள் தெரிந்தன. அவனை நேர்முகத் தேர்வு செய்ய வந்த பக்டரியின் துணை இயக்குனர், இரு புறமும் பச்சைப்புல் மட்டமாக வெட்டப்பட்டு நடுவில் ஓடிய கான்கிரீட் பாதையில் நீண்ட நடை நடந்து, படலைக்கு வந்து கைகுலுக்கி, அவனை அவரது அலுவலகத்துக்கு கூட்டிச் சென்றார். சற்றுக் கூனியிந்திருந்த அவர் முதுகைப் பார்த்தபடி பின் தொடர்ந்தான் கதிர்.

அது ஒரு கிரேக்க கொம்பனி. உலகின் வேறு சில இடங்களிலும் அதற்கு தொழிற்சாலைகள், விற்பனை அலுவலகங்கள் இருந்தன. அறிமுகத்தை தொடர்ந்து அவனிடம், "கார் இருக்கிறதா" என்று கேட்டார்.

"இப்போது சைக்கிள்தான். வேலை கிடைத்தால் கார் வாங்க எண்ணியுள்ளேன்" என்றான் கதிர் அவனுக்குத்தெரிந்த ஆங்கிலத்தில்.

கதிரின் விண்ணப்பத்தைப் பார்த்துவிட்டு, "உனக்கு பாரம் தூக்கிய அனுபவம் உண்டு இல்லையா? ஆனால், இங்கே பாரம் இழுக்கும் வேலைதான் இப்போது இருக்கிறது" என்றார் அந்த கிரேக்க முதலாளி.

அது எப்படி என்று கேட்காமலேயே, "செய்வேன் ஐயா" என்று தலையாட்டினான் கதிர்.

அவன் சொன்ன சகல பொய்களுக்கும் பரிசாக வேலை கிடைத்தது.

அவன் அந்த தொழிற்சாலையில் சேர்ந்தபோது முதலில் அவனை, அணியில் வேலை செய்யும் பெண்கள் 'பலட்டில்' அடுக்கி வைக்கும் சோப், பவுடர் அடைக்கப்பட்ட பெட்டிகளை கை வண்டியில் இழுத்து செல்லும் வேலைக்கு நியமித்தார்கள். கழுத்திலிருந்து கால் வரைக்கும் நீளும் நீல நிற அங்கியும் கால்களைப் பாதுகாக்க சப்பாத்தும் தரப்பட்டது.

சோப்புத் தூள் கொண்ட ஆறு பெட்டிகளை ஒரு காட்போட் பெட்டிக்குள் வைத்து சீல் பண்ணிய பின்னர், ஒரு அடுக்கில் எட்டு எட்டுப் பெட்டிகளாக வைத்து, மரப் பலட்டில் அவை அடுக்கப்படும். அடுக்கிய பின்னர் உற்பத்தி வரிசை அணியில் நிற்கும் மரியா அல்லது ரீனா அவனைக்கூப்பிடுவார்கள். ஓடிச்சென்று அந்த பலட்டை கை வண்டியால் இழுத்துக்கொண்டுபோய் அவற்றுக்கு பிளாஸ்டிக் உறைபோடும் இடத்தில் விடவேண்டும்.

கொஞ்ச நாட்கள் அதில் வேலை செய்த பின்னர், பெட்டிகளை இழுத்துச் செல்வதற்கு போக் - லிப்ட் இயந்திரம் பாவனைக்கு வந்தது. கதிருக்கு போக் - லிப்ட் ஓடும் லைசென்ஸ் இல்லாததால் சோப்புத்தூள் தயாரிக்கும் பகுதிக்கு மாற்றப்பட்டான்.

சலவைத்தூள் பகுதியில் அவனுடன் நால்வர் வேலை செய்தார்கள். அப்பகுதியெங்கும் சலவைத்தூள் தூசி காற்றில் மிதந்து தலைமுடியிலும் இமை, மீசை, தாடி இருந்தால் அங்கெல்லாம் படிந்து நால்வரும் முதிய தோற்றம் காட்டுவர். தேவையென்றால் மூக்குக்கு மாத்திரம் மாஸ்க்கும் கண்ணுக்கு பிளாஸ்டிக் கண்ணாடியும் போட்டுக்கொள்வர். இருந்தாலும் அதை மீறி சோப்புத் தூசு உள்நுழைவது வழமையாகவிருந்தது.

"காலையில் இளைஞனாயிருந்தாய். அதற்குள் கிழவனாகிவிட்டாயா" என்று கதிரைப் பார்த்து கேலி செய்வாள் மிச்செல்.

மிச்செல் அந்த பக்டரியின் தரக்கட்டுப்பாட்டுப் பகுதியில் வேலை செய்ததால், பவுடர் சாம்பிள்களை பரிசோதனைச் சாலைக்கு எடுத்துக்கொண்டு போவதற்காக வருவாள். ஒவ்வொரு உற்பத்தி அணியிலும் இரண்டு தடவைகள் சாம்பிள்கள் எடுக்கப்படும். அந்த சாம்பிள்களை எடுப்பதற்காக அவ்வப்போது கொன்ரோல் ரூமுக்கு வருவது வழக்கம்.

மேலே இரண்டாம் தளத்தில் குருணல்களாக விழுந்து கொண்டிருக்கும் சோப்புத் துகள்களின் உற்பத்தியை, கணினி மூலம் கண்காணிக்கவென கட்டப்பட்டிருந்த அரைவாசிக்கு கண்ணாடிச் சுவர் கொண்ட கொன்ரோல் ரூமில் ஒருநாள் பேசிக்கொண்டிருந்தபோது, தான் கருவுற்றிருப்பதாகவும் பேறுகால லீவு முடிந்ததும் ஒரு வருடம் சம்பளமில்லாத லீவு எடுத்துக்கொள்ளக் கேட்டதாகவும், கொம்பனி இன்னும் முடிவு சொல்லவில்லை என்றும் சொல்லிக் கொண்டிருந்தாள் மிச்செல்.

தொடர்ந்து தனது கதையை சொல்லிக்கொண்டே போனவள் கதிரின் பார்வையை புரிந்து கொண்டு, "இன்னும் திருமணம் செய்யவில்லைதான். ஆனால், இது விபத்துப்போலநடந்துவிட்டது"என்றுவெட்கப்படாமல்



சிரித்தாள்.

“பிள்ளை பிறக்கு முன்பே நான் ஜேம்ஸை மணம் புரிவேன். உனக்கு நிச்சயம் திருமண அழைப்பிதழ் அனுப்புவேன்” என்றாள்.

கதிர் மொபைல் நம்பரைக் கொடுத்தான்.

கதிரின் அந்த போனில் மிச்செல் ஒரே ஒரு குறுஞ் செய்திதான் அனுப்பியிருந்தாள். அதன் பிறகு அதிக நாட்கள் செல்லவில்லை.

மிச்செல் இரண்டு நாட்களாக காரணம் ஏதும் சொல்லாமல் வேலைக்கு வராததை மிச்செலின் சகோதரிக்கு தொழிற்சாலை நிர்வாகம் அறிவித்து, மிச்செலின் சகோதரி அவளது வீட்டுக்குச்சென்று பார்த்தபொழுது மரணதிற்கான எந்த தடயமுமில்லாது படுக்கையறையிலேயே செத்துக்கிடந்திருக்கிறாள். பிரேத பரிசோதனையில்கழுத்தைஇறுக்கியமூச்சுத்திணறலினால் மரணம் சம்பவித்தமை உறுதிசெய்யப்பட்டது.

அதன்பின்னர், ‘ஐஸ்’ என்னும் போதை மருந்து பாவித்து வந்த மிச்சேலின் போய் பிரெண்ட் ஜேம்ஸிடம் அது தொடர்பாக வாக்கு வாதப்பட்ட ஓரிரவில் மிச்சேலின் மரணம் நிகழ்ந்ததாக அறிய வந்தது.

எல்லாவற்றையும் கதிருடன் பகிர்ந்துகொண்ட மிச்செல், ஜேம்ஸின் போதை பழக்கத்தை மட்டும் அவனுக்குச் சொல்லவேயில்லை. இந்த ரகசியங்களை எந்தப் பெண்ணாலும் வெளியே சொல்லமுடியாதோ என்னவோ? அல்லது ஜேம்ஸை எப்படியாவது மாற்றிவிடமுடியும் என்று அவள் நம்பியிருக்கலாம். அதன்பின்னர், கதிருக்கு அவனை அறிமுகம் செய்ய எண்ணியிருக்கலாம்.

ஒளிந்திருந்த ஜேம்ஸை இருநூறு கிலோ மீட்டருக்கப்பாலிருந்த பண்ணை வீடு ஒன்றிலிருந்து பொலீஸ் சுற்றிவளைத்துப் பிடித்தது.

கதிர் பேரதிர்ச்சியிலிருந்தான்.

இரண்டு நாட்கள் தொழிற்சாலை மூடப்பட்டது. கதிர் ஒரு பைத்தியக்காரனைப் போல, எல்லாவற்றையும் மறந்துவிட்டவனைப்போல, எதுவும் நினைவுக்கு வராதவனைப்போல, மிச்செலின் நினைவுகளுடன் அலைந்து களைத்தான்.

அந்த நாட்களில் மிச்செலின் மரண சடங்கு நடைபெற்றது. தொழிற்சாலை மூடப்பட்டிருந்தாலும் எவருக்கும் இறுதி யாத்திரைக்கு அழைப்பு கிடைக்காததால், தொழிலாளர்களிடம் பணம் சேர்த்து, பூங்கொத்து ஒன்றினை அனுப்புவதற்கும், மிகுதிப் பணத்தை போதை மருந்து தவிர்ப்பு ஆலோசனை சபை ஒன்றுக்கு அனுப்பவதற்கும் தொழிற்சாலை நிர்வாகம் முடிவு செய்திருந்தது.

மிச்செல் இல்லாமல் போன இரண்டாவது கிழமைதான் கதிருக்கு கஷ்ட காலம் பிடித்தது.

பவுடர் சாம்பிள் ஒன்றைப் போத்தலில் எடுத்துக் கொண்டுபோய் கொன்ரோல் ரூமிலிருந்த சில்வியாவிடம் கொடுத்துவிட்டு வந்தான் கதிர். மிச்சலுக்கு பதிலாக அவளது வேலையை செய்த வந்தவள்தான் சில்வியா. அவள் போலந்தில் பிறந்தவள்.

அன்று அவன் சில்வியாவிடம் கொடுத்த சாம்பிள் தரக்கட்டுப்பாட்டுப் பரிசோதனையில் நிராகரிக்கப்பட்டது. சில்வியாவிடம் கொடுத்திருந்த, மென் நீலமாக இருக்கவேண்டிய, சோப்புத்துகள்கள் எவ்வாறு கருநீலமாக நிறம் மாறியிருந்தது என்று அவனுக்குப் புரியவே இல்லை.

நிர்வாக அதிகாரி நிக் மோனஸ் கதிரை தனது அலுவலகத்துக்கு கூப்பிட்டு சரமாரியாக திட்டினான்.

“இனிமேல் இப்படியான தவறுகளை கேட்க நான் விரும்பவில்லை. அடுத்த முறையும் நீதான் இதற்கு பொறுப்பாளியாக இருந்தால் இரண்டு வார நோட்டீஸுடன் வேலையிலிருந்து நிறுத்திவிடுவேன்” என்று மிரட்டி அனுப்பினான்.

இரண்டு வார நோட்டீஸ் என்பது வேலைக்கு சேர்ந்தபோதே அவன் கையொப்பமிட்டுக் கொடுத்த ஒப்பந்தம். என்ன செய்ய முடியும்? கதிர் யூனியனிலும் இல்லை.

தரக்கட்டுப்பாட்டாளர்களால் நிராகரிக்கப்பட்டதற்கு அமைய இருபத்திநாலு தொன் சோப்புத் துகள்களையும் அதன் முடிக்கப்படாத கரைசலையும் அப்புறப்படுத்துவதென்பது முதுகு முறியும் வேலை. அதைவிட, பில்ட்டர்களையும் தாங்கிகளையும் கழுவித் துப்பரவாக்கி புதிய அணிக்கு அதனை தயார்படுத்து வதற்கிடையில் குறைந்தது மூன்று நாட்கள் ஓடிவிடும்.

